மண்டல புருடர்

வழங்கிய

# சூடாமணி நிகண்டு

(பதினொன்றாம் தொகுதி)

## ஒருசொல் பலபொருள் விளக்கம்

பதிப்பாசிரியர்

மு. சண்முகம் பிள்ளை

இ. சுந்தரமூர்த்தி



International Institute of Tamil Studies

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# மண்டல புருடர்

வழங்கிய

# சூடாமணி நிகண்டு

(பதினொன்றாம் தொகுதி)

*ஒருசொல் பலபொருள் விளக்கம்*

பதிப்பாசிரியர்

**மு. சண்முகம் பிள்ளை**

**இ. சுந்தரமூர்த்தி**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை – 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Mandala Purudar's Soodamani Nigandu** |
| Editors | : | **M. Shanmugam Pillai**<br>**E. Sundaramoorthy** |
| Publisher | : | **International Institute of Tamil Studies, C.I.T. Campus, Taramani, Chennai - 600 113.** |
| Publication No | : | 310 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1998 |
| Edition | : | First |
| Paper Used | : | TNPL 16kg Super Printing |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No.of Pages | : | 300 |
| Price | : | Rs. 65 (Sixty Five Rupees Only) |
| No.of Copies | : | 1000 |
| Printed by | : | Parkar Computers and Publications<br>293, Royapettah High Road,<br>Chennai - 600 014. |
| Subject | : | Lexicography |

**ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை.

# அணிந்துரை

நிகண்டு நூற்கள் அகராதியியலின் முன்னோடியாய் விளங்குவன. தொல்காப்பியச் சொல்லதிகார உரியியல், பொருளதிகாரத்தில் அமைந்துள்ள உவமவியல் மரபியல் என்பவற்றுள் அமைந்துள்ள சில நூற்பாக்களின் விரிவாக்கமாய் நிகண்டு அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது. சொல்லையும் பொருளையும் தொகுத்துக் கூறும் முறையில் நிகண்டின் அமைப்பு உள்ளது. இது ஆங்கிலத்தில் கூறப்பெறும் 'Thesaurus' என்னும் அமைப்பை ஒட்டியது எனலாம். சொற்பொருள் களஞ்சியமாக விளங்கும் நிகண்டுகள் இம்மரபின் முன்னோடியாக அமைந்துள்ளமை பெரிதும் எண்ணத்தக்கது. தமிழில் ஏறத்தாழ ௮ஆம் நூற்றாண்டிலேயே நிகண்டு நூல் தோன்றிவிட்டது. திவாகரர் எழுதிய திவாகரம் முதல் நிகண்டு நூலாகும் (௮ஆம் நூற்றாண்டு). அதற்குப் பின்னர் பிங்கலர் எழுதிய பிங்கலந்தையும், காங்கேயர் எழுதிய உரிச்சொல் நிகண்டும், கயாதரர் எழுதிய கயாதரமும், மண்டலபுருடர் எழுதிய சூடாமணி நிகண்டும், ரேவணசித்தர் எழுதிய அகராதி நிகண்டும் குறிப்பிடத் தகுந்த நூல்களாகும். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்நூல்கள் எல்லாம் அச்சுருப்பெற்று வெளிவந்தன.

இவற்றுள் பல நூல்கள் இன்று கிடைப்பதில்லை. சூடாமணி நிகண்டில் அமைந்துள்ள பதினொன்றாம் தொகுதி மட்டும் பலமுறை பதிப்பிக்கப்பெற்றுப் பெருவழக்கில் உள்ளது. 'ஒரு சொல் பலபொருள் விளக்கம்' என்னும் இத்தொகுதி சூடாமணி நிகண்டின்

பதினொன்றாம் தொகுதியாகும். 1850 ஆண்டில் பதிப்பிக்கப் பெற்ற இந்நூல் மீண்டும் மறுபதிப்புப் பெறுகின்றமை பெரிதும் மகிழ்ச்சிக்குரியதாகும்.

பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை அவர்கள் தம் மறைவிற்கு முன்னர் இந்நூலினை வெளியிடுமாறு வேண்டுகோள் விடுத்தார்கள். பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்களின் 'சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும்', 'சங்கத்தமிழர் வாழ்வியல்' ஆகிய இரு நூல்களையும் நிறுவனம் வெளியிட்டுள்ளது. இந்நூல்களுள் 'சங்கத்தமிழரின் வழிபாடும் சடங்குகளும்' என்னும் நூல் தமிழக அரசின் முதற் பரிசையும்பெற்று நிறுவனத்திற்குப் பெருமை சேர்த்தது என்பதையும் நினைவுகூர்ந்து 'ஒருசொல் பலபொருள் விளக்கம்' என்னும் இவ்வரிய பதிப்பை வெளியிட்டு நிறுவனம் அவருக்குத் தன் அஞ்சலியைத் தெரிவித்துக் கொள்கின்றது.

பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்களும் பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்களும் சென்னைப் பல்கலைக்கழகத்தின் வாயிலாகத் திவாகரம் (இரு தொகுதிகள்) நூலினை முன்னரேயே வெளியிட்டு நிகண்டுத் துறையில் உழைத்துள்ளனர். இப்பொழுது ஒருசொல் பலபொருள் விளக்கம் என்னும் இவ்வரிய பதிப்பினை வெளியிட்டுள்ளனர். பதிப்பாசிரியர் இருவருக்கும் எங்கள் நன்றி.

நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத்தலைவர் தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைச் செயலர் மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு. த. இரா. சீனிவாசன் அவர்களுக்கும் எங்கள் நன்றி. நன்முறையில் நூலினை உருவாக்கிய திரு. வே. கருணாநிதி அவர்கட்கும் எங்கள் நன்றி.

29.9.98 **இயக்குநர்**

# பதிப்புரை

## நோக்கு நூல்கள்

தமிழ்ச் சொற்களுக்குரிய பொருள்களையும் அவற்றின் பயன் பாடுகளையும் அறிந்து கொள்வதற்குத் தேவையான சூழல்கள் ஏற்பட்டபோது உருவானவை நிகண்டு நூல்கள் ஆகும். காலந் தோறும் மொழியின் வளர்ச்சியில் அதன் இயல்புக்கேற்பப் பல சொற்கள் புதியனவாய்த் தோன்றிக் கொண்டேயிருக்கும்; பல சொற் கள் பயன்பாடு குன்றி வழக்கில் மறையத் தொடங்கும்; சில சொற்கள் புதிய பொருட்களைப் பெற்று விளங்கும். இவற்றைத் தொகுத்துக்காணும் சூழல் ஏற்படும்போதுதான் நோக்கு நூல் களின் (References) இன்றியமையாமையை உணரமுடியும். அவ் வகையில் முன்னையோர் அரிதின்முயன்று தொகுத்த நூல்கள் நிகண்டுகளாகும்.

## களஞ்சியம்

சங்கத் தமிழுக்குப் பின்னர் காலந்தோறும் புலவர்கள் கையாண்ட செய்யுள் நடையிலும் கவிதைப் பண்பிலும் பல்வேறு புதிய இயல்புகள் தோன்றின. சொற்களின் தன்மையிலும், வடிவங் களிலும், தொடர்களின் அமைப்பிலும் மொழிநடையிலும் மாறு தல்கள் தோன்றின. பழந்தமிழ் இலக்கியங்களில் வழங்கும் சொற் களின் பொருள்களை அறிந்துகொள்ளப் பிற்காலத்தில் கடின மாயிருந்திருக்கக் கூடும். புலவர்களுக்கும், இலக்கியப் பயிற்சி யில் ஈடுபட்டவர்களுக்கும் பண்டைக்கால நூல்களையும் பாடல் களையும் அறிந்து கொள்வதற்குக் கருவி நூல்கள் தேவை

யாயிருந்தன. இத்தேவையின் அடிப்படையில் நிகண்டு நூல்கள் உருவாகியிருக்கக்கூடும். நிகண்டுகள் இக்காலத்திலுள்ள வெறும் அகராதிகள்போல் சொற்களுக்குப் பொருள்மாத்திரம் கொடுக்கும் நூல்களாக இல்லாமல் அக்காலத்திலுள்ள அறிவின் களஞ்சியங் களாகவே இருக்கவேண்டுமென்று ஆக்கப் பெற்றன என்பர் (ஏ.வி. சுப்பிரமணிய அய்யர், தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, பக். 327, 328).

### உரிச்சொல் பனுவல்

நிகண்டு நூல்களை உரிச்சொல் என்னும் சொல்லால் குறிப் பார் பவணந்தியார்.

> இன்ன தின்னுழி இன்னணம் இயலும்
> என்றிசை நூலுள் குணகுணிப் பெயர்கள்
> சொல்லாம் பரத்தலிற் பிங்கலம் முதலா
> நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே (460)

என்னும் நூற்பாவிற்கு உரையெழுதிய மயிலைநாதரும் 'அவை பிங்கலம் முதலான புலவர்களாற் செய்யப்பட்ட உரிச்சொற் பனு வல்கள்' எனக் குறிப்பதும் கருதத்தக்கது.

> பிங்கல முனிவன் எனத்தன் பெயர் நிறீஇ
> உரிச்சொற் கிளவி விரிக்கும் காலை
> (பிங்கலம் 2)

> தேவைக் கெயாதரன் தொல்
> வேதியன் சொற்ற உரிச்சொற் பனுவல்
> (கயாதரம் 2)

> உத்தம சீலத்துக் காங்கேயன் சொன்ன உரிச்சொல்

எனவரும் தொடர்களால் நிகண்டு நூல்களை உரிச்சொல், உரிச் சொற்பனுவல் என முன்னையோர் குறித்தனர் என்பது தெளிவாகும். இப்போது உரிச்சொல் என்னும் தொடரால் நிகண்டுகளைக்

குறிக்கும் வழக்கம் வீழ்ந்துவிட்டது எனலாம். இதுகுறித்துப் பேரா சிரியர் வையாபுரிப்பிள்ளை பின்வருமாறு கூறுவர்:

> சொற்பொருள் உணர்த்தும் கருவிநூல்கள் இருந்தன என்பதும் அவற்றை 'நிகண்டு' என்ற பெயரால் வழங் கினர் என்பதும் நாம் அனைவரும் அறிந்தனவே. இப் பெயர் வடமொழிப் பெயராயிற்றே! தமிழில் இக்கருவி நூலுக்குப் பெயர் இல்லையா? இப்படிச் சிலர் கேட்க லாம். தமிழ்ப் பெயரும் உண்டு. 'உரிச் சொற்பனுவல்' என்பது அப்பெயர். நெருடான இத்தமிழ்ப் பெயர் நாள டைவில் மறைந்துவிட்டது. நிகண்டு என்ற பெயரே தமிழாகி நிலைத்துவிட்டது.

என்று தம் வானொலிப் பேச்சில் (5.9.1938) குறிப்பிடுவார்.

**தொல்காப்பியமும் நிகண்டும்**

நிகண்டுகளின் தோற்றத்திற்குத் தொல்காப்பியம் அடிப் படையாக இருந்தது. தமிழ் அகராதியியல் வரலாற்றில் சொற் பொருள் கூறும் வகையினைச் சார்ந்த நிகண்டுகளுக்குத் தொல் காப்பியம் மூலநூலாகத் திகழ்ந்தது எனலாம். தொல்காப்பிய நூற் பாக்கள் பலவும் திவாகரத்தில் இடம் பெற்றுள்ளன. கருப்பொருள் விளக்கம் கூறும்,

தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப

என்னும் தொல்காப்பிய நூற்பாவின் அடிப்படையில் திவாகர நிகண்டுத் தொகுதிகள் அமைந்தன என்பர். தொல்காப்பியம் தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, யாழ் என ஏழுவகைக் கருப்பொருள்களைக் குறிக்கின்றது. இவற்றுள் தெய்வம் திவா கரம் தெய்வப் பெயர்த் தொகுதியிலும், உணவு பல்பொருள் பெயர்த் தொகையிலும், மாவும் புள்ளும் விலங்கின் பெயர்த் தொகுதியிலும், மரம் மரப் பெயர்த் தொகுதியிலும், பறையும்

யாழும் செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளன. வினையியல் செயல்பற்றிய பெயர்த் தொகுதிக்கு அடிப்படையாகலாம். உரியியலில் அமைந்துள்ள பல்வேறு சொற்களும் ஒருசொல் பல்பொருள், பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதிக்கும் மூலமாய் அமைந்தன எனலாம். எனவே நிகண்டுகளின் தோற்றத்திற்கு மூலமாய்த் தொல்காப்பியம் அமைந்து விளங்குவதை நன்குணர முடிகின்றது.

**நிகண்டின் இன்றியமையாமை**

தமிழ் கற்க விரும்புவோர் தொடக்க காலத்தில் நிகண்டுகளையும் இலக்கண நூற்களையும் முதலில் கற்றுத் தேர்ந்தனர். இலக்கணம் கற்குமுன் நிகண்டுகள் கற்க வேண்டிய இன்றியமையாமையை மாதவச் சிவஞான சுவாமிகள் தம் நன்னூல் விருத்தியுரையில் பின் வருமாறு குறிப்பிடுவார்:

> யாவரும் உணர எனவே முன்னர் நிகண்டு கற்றுச் செய்யுள் ஆராய்ச்சியுடையார்க்கே அவற்றை ஆராய்வுழி அவற்றின்கண் உளவாகிய செய்கை வேறுபாடுகளும், சொன்மரபு, பொருள்மரபு வேறுபாடுகளும் இன்னவென்று துணியப்படாமையின் அவற்றைத் துணிந்தறிய வேண்டிய இவ்வியற்றமிழ் நூல் கேட்டறிதலின் கண்ணே ஊக்கம் செல்லுமாகலின் அவை ஆராய்ந்தபின்னர் இது கேட்டற்பாற்றென்னும் யாப்பும் அவை ஆராய்ந்தார் இது கேட்டற்கு உரியர் என்னும் கேட்போரும்

என விளக்குவதால் தமிழ் கற்கத் தொடங்குவார் முதலில் நிகண்டு கற்க வேண்டுவது இன்றியமையாதது என்பது புலனாகும். சூடாமணி நிகண்டை மனப்பாடம் செய்து ஒப்பிக்குமாறு வற்புறுத்தும் கல்விநெறிமுறையும் இங்கு எண்ணத்தக்கது.

**நிகண்டுகள்**

மொழிப்புலமை பெற விரும்புவோர் அக்காலத்தே நிகண்டுகளில் தம்மனத்தைச் செலுத்தியது போலவே இக்காலத்தில் நாம்

அகராதிக் கலையில் ஈடுபாடு கொள்கின்றோம். அகராதிப் பணியில் ஈடுபட்ட பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை நிகண்டுகளை அகராதிக்குரிய மூலநூல்கள் எனச்சுட்டுவார். எனவே அப்பணிக்குரிய மூலநூல்களாகப் பல்வேறு நிகண்டுகளைப் பதிப்பித்தார். நாமதீப நிகண்டு (1930), அரும்பொருள் விளக்க நிகண்டு (1931), பொதிகை நிகண்டு (1934), கயாதர நிகண்டு (1939) ஆகிய நிகண்டு நூல்களை இதற்கெனவே பதிப்பித்து வெளியிட்டார். பிங்கலநிகண்டு, கைலாசநிகண்டு ஆகியவற்றையும் பதிப்பிக்கப் பல்வேறு முயற்சிகளையும் மேற்கொண்டார்.

அரும்பொருள் விளக்க நிகண்டின் முன்னுரையில் ஆங்கிலப் பேரகராதியை முன்வைத்து நாம் உழைத்து வெளிக் கொணர வேண்டிய முயற்சிகளைத் தமிழுணர்வு மிளிரச் சுட்டுவது பெரிதும் கருதத்தக்கது:

> நூதன ஆங்கிலப் பேரகராதியைக் குறித்துத் தமிழன்பர்கள் அறிவார்கள். இச்சீரிய பெருநூல் காலகதியிற் பற்பல கோலஞ் சமைந்து சொற்செல்வி நடனஞ் செய்யும் அரங்கமாக விளங்குகின்றது.
>
> நாடோறும் புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டிருக்கும் சொற்களின் பிறப்பகமாகவும் திகழ்கின்றது. இவ்வகராதியின் சரிதமுழுமையும் இடைவிடாத உழைப்பினாலும் சலிப்பறியாத மனவொருமையினாலும் நிரம்பியுள்ளது. இதன் பொருட்டுத் தம்மையே தத்தஞ்செய்து முயன்று வந்தோர் ஒருவர் இருவரல்லர். பல அறிஞர்கள் தங்கள் ஆயுட்காலத்தையும் ஆத்ம சக்தியையும் இவ்வகராதியொன்றற்கே உரிமையாக்கினர். இவ்வறிஞர்களும் ஒரு தலைமுறையினரல்லர். அடுத்தடுத்து வந்த நான்கு தலைமுறையினர் அகராதிக்கென உழைத்து வந்தனர். இங்கிலாந்து தேசத்தில் மட்டுமன்று இங்ஙனம் உழைத்து வந்தவர் ஆங்கிலம் பேசும் மக்களுள்ள தேசப் பகுதிகள் அனைத்தும் இயன்றவரை கூட்டுறவு

செய்துவந்தன. இந்நூதன ஆங்கிலப் பேரகராதியோடு எவ்வகையால் நோக்கினும் ஒத்துநிற்கக் கூடிய அகரா திப் பொருள்கள் நமது தமிழன்னையிடத்தே உள்ளன. அவற்றையறிந்து பயன்படுத்தும் மக்களை அவள் பெற் றிலளென்று உலகம் பழியாமைப் பொருட்டுத் தமிழ் மக்களாயுள்ளோர் அனைவரும் ஒருமுகமாக உழைத்தல் வேண்டும். இப்பெரு முயற்சியில் எனது ஆற்றலுக்கேற்ற படி உழைத்து வருகிறேன். தமிழ் நூல்களுக்குரிய மூல நூல்களை ஒவ்வொன்றாக வெளியிடக் கருதுகிறேன். இறைவன் திருவருள் முன்னிற்க.

என்று அரும்பொருள் விளக்க நிகண்டு முன்னுரையில் குறிப்பிட் டுரைப்பார். எனவே அகராதிக்கலை வளர்ந்து வருகின்ற இந் நாளில் பழைய நிகண்டுகளின் தோற்றம் வளர்ச்சி ஆகியன பற்றி யும் அறிந்துகொள்வது மிக இன்றியமையாதது ஆகும். தமிழில் தோன்றிய நிகண்டுகள் அதன் பதிப்பு விவரம் முதலாயின வருமாறு:

| என் | நிகண்டின் பெயர் | ஆசிரியர் | காலம் |
|---|---|---|---|
| 1. | திவாகரம் | திவாகரர் | 9 நூ. |
| 2. | பிங்கலம் | பிங்கலர் | 10 நூ. |
| 3. | உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் | 14 நூ. |
| 4. | கயாதரம் | கயாதரர் | 15 நூ. |
| 5. | பாரதிதீபம் | திருவேங்கடபாரதி | 15 நூ. |
| 6. | சூடாமணிநிகண்டு | மண்டலபுருடர் | 16 நூ. |
| 7. | அகராதிநிகண்டு | இரேவணசித்தர் | 1594 |
| 8. | கைலாசநிகண்டு | கைலாசம் | 16 நூ. |
| 9. | ஆசிரியநிகண்டு | ஆண்டிப்புலவர் | 17 நூ. |
| 10. | பல்பொருள் சூடாமணி (வடமலை நிகண்டு) | ஈசுரபாரதி | 1700 |

| | | | |
|---|---|---|---|
| 11. | சதுரகராதி | வீரமாமுனிவர் | 1732 |
| 12. | அரும்பொருள்விளக்க நிகண்டு | அருமந்தையதேசிகர் | 1769 |
| 13. | பொதிகைநிகண்டு | சாமிநாதகவிராயர் | 18 நூ. |
| 14. | நாமதீபநிகண்டு | சிவசுப்பிரமணிய கவிராயர் | 19 நூ. |
| 15. | பொருட்டொகை நிகண்டு | சுப்பிரமணியபாரதி | 19 நூ. |
| 16. | கந்தசுவாமியம் | சுப்பிரமணியதீட்சிதர் | 1844 |
| 17. | நாநார்த்த தீபிகை | முத்துசாமிப்பிள்ளை | 1850 |
| 18. | தொகைப்பெயர் விளக்கம் | சுப்பிரமணிய தீட்சிதர் | 18 நூ. |
| 19. | இலக்கியத்திறவுகோல் | சுப்பிரமணிய தீட்சிதர் | 18 நூ. |
| 20. | அகராதிமோனைக் ககராதியெதுகை | சுப்பிரமணிய தீட்சிதர் | 18 நூ. |
| 21. | சிந்தாமணிநிகண்டு | வைத்தியலிங்கம் பிள்ளை | 1874 |
| 22. | அபிதான சிந்தாமணிச் செய்யுள் நிகண்டு | கோபால்சாமிநாயக்கர் | 1878 |
| 23. | அபிதான மணிமாலை | திருவம்பலத்தின்ன முதம் பிள்ளை | 19 நூ. |
| 24. | விரிவுநிகண்டு | அருணாசலநாவலர் | 19 நூ. |
| 25. | நவமணிக்காரிகை நிகண்டு | அரசன்சண்முகனார் | 20 நூ. |
| 26. | தமிழுரிச்சொற்பனுவல் | கவிராச பண்டிதர் இராமசுப்பிரமணிய நாவலர் | 20 நூ. |

## நிகண்டு நூல்கள்

திவாகர நிகண்டு (9ஆம் நூ.) பழமையான நூல். பன்னிரு தொகுதிகளாகப் பகுக்கப் பெற்றுள்ள நூல். அவை தெய்வப் பெயர்த்தொகுதி, மக்கட் பெயர்த்தொகுதி, விலங்கின் பெயர்த் தொகுதி, மரப்பெயர்த் தொகுதி, இடப்பெயர்த்தொகுதி, பல் பொருட்பெயர்த்தொகுதி, செயற்கை வடிவின் பெயர்த்தொகுதி, பண்பு பற்றிய பெயர்த்தொகுதி, செயல்பற்றிய பெயர்த்தொகுதி, ஒலிபற்றிய பெயர்த்தொகுதி, ஒருசொற்பல்பொருட் பெயர்த் தொகுதி, பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த்தொகுதி என்பன வாகும். திவாகரத்திற்குப் பின்னர்த் தோன்றிய பல நிகண்டுகளும் இவ்வமைப்பையும் பாகுபாட்டையுமே பின்பற்றின. பிற்காலத்தில் காலப்போக்கிற்கு ஏற்பச் சிற்சிறு மாற்றங்களை மேற்கொண்டன.

பிங்கலநிகண்டு (10ஆம் நூ.) பத்துத் தொகுதிகளில் அமைந்துள்ளது. பிங்கலர் அமைத்த தொகுதிப்பிரிவு ஒருவகைத் தனிமுறையாய் அமைந்துள்ளது. காங்கேயரின் உரிச்சொல் நிகண்டு (14ஆம் நூ.) வெண்பாயாப்பினது. முன்னர் அமைந்த நூல்களின் கருத்துத் தொகுப்பு எனலாம். கயாதர நிகண்டு (15ஆம் நூ.) 11 தொகுதிகளைக் கொண்டது. 566 கட்டளைக் கலித்துறைப் பாடல்களைப் பெற்று விளங்குகின்றது. நூல் முழுமையும் அந்தாதிப்பாடலால் அமைந்தது. பாரதிதீபநிகண்டு (15ஆம் நூ.) திருவேங்கட பாரதியாரால் இயற்றப்பெற்றது கட்டளைக் கலித்துறைப் பாவால் ஆயது. அடைமொழிகள் அதிக மின்றிப் பெயர்களைத் தொகுத்து அமைத்த நூல். 'களவன்' என் னும் சொல்லின் மூலவடிவத்தை இந்நிகண்டால் அறிய முடிகின் றது (களவன் - நண்டு).

சூடாமணி நிகண்டு (16ஆம் நூ.) சொற்பொருள்களை எளி மையாக அறிந்துகொள்ளுமாறு அமைந்துள்ளது. மண்டலபுருடர் இதன் ஆசிரியராவர். இது பல்லோராலும் விரும்பிப் பயிலப்பெற்ற நிகண்டு நூலாகும். இந்நூலின் 'பதினோராம் தொகுதி' மட்டும் பல்வேறு பதிப்புகளைப் பெற்று விளங்குகின்றது. ஒருசொல்

பலபொருள் விளக்கம் என்னும் இந்நூலும் பதினோராம் தொகுதி யாகும். தாண்டவராய முதலியார் இந்நூலை 1839இல் முதன் முதலில் அச்சில் பதிப்பித்து வெளியிட்டார்.

இரேவண சித்தரின் அகராதிநிகண்டு (1594) அகரவர்க் கம் முதலாக வகரவர்க்கம் ஈறாகப் பத்துப் பகுதிகளைப் பெற்று விளங்குகின்றது. அகரநிரலைப் பின்பற்றிய நிகண்டுநூலாகும். 'இதன்கண் பிறநிகண்டிலுள்ள சொற்களும் பொருளும் காணப்படி னும் அவற்றில் இல்லாத சங்க மருவிய சான்றோர் செய்யுட் களிலும் அவற்றின் உரைகளிலும், பிற்காலத் தமிழ் நூல்களிலும், வழங்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்களும், உலகவழக்கில் உள்ள வெளிப்படைச் சொற்களும், தெலுங்கு கன்னடம் முதலிய தமிழ் திரி பிறமொழித் திரிசொற்களும் ஆங்காங்கு செந்தமிழ் நாட்டுள் வழங்கும் திசைச்சொற்களும் மருவியும் திரிந்தும் வழங்கும் திசைச் சொற்களும் மருவியும் திரிந்தும் வழங்கும் வடசொற் களும் இடையிடையே மலிந்து கிடக்கின்றன' என்று திருநாரண யங்கார் தம் முகவுரையில் (1920) கூறுவது குறிப்பிடத்தக்கது.

ஆசிரிய நிகண்டு (17ஆம் நூ.) ஆண்டிப்புலவரால் இயற் றப் பெற்றது (11 தொகுதிகள்). அருமருந்தைய தேசிகர் இயற் றிய அரும் பொருள் விளக்க நிகண்டு (1763) 700 விருத்தங் களைப் பெற்று விளங்குகின்றது. சாமிகவிராயரின் பொதிகை நிகண்டு 10 தொகுதிகளைக் கொண்டது. நாமதீப நிகண்டு வெண்பா யாப்பில் 12000 சொற்கள் பற்றி எடுத்துரைக்கின்றது. இந்நூற் பொருள் அமைந்து விளங்கும் திறத்தைப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை பின்வருமாறு வரைபடத்தில்(பக்:14) அமைத் துக் காட்டியுள்ளார். மொத்தம் 808 வெண்பாக்களில் இந்நூல் அமைந்துள்ளது.

பொருட்டொகை நிகண்டு தொகைப்பெயர்களைத் தொகுத் துத் தருகின்றது. சுப்ரமணிய பாரதி என்பாரால் இயற்றப்பெற்றது. நாநார்த்த தீபிகை சூடாமணி நிகண்டைப் பின்பற்றி எழுந்தது




ஆகும். களத்தூர் வேதகிரிமுதலியாரால் இயற்றப்பெற்ற தொகைப் பெயர் விளக்கமும் குறிப்பிடத்தக்கது. யாழ்ப்பாணம் வைத்திய லிங்கம்பிள்ளை இயற்றிய சிந்தாமணி நிகண்டு பதினோராம் தொகுதி அமைப்பைக் கொண்டு விளங்குவது. அபிதானச் செய் யுள் நிகண்டு, தமிழ்உரிச்சொற்பனுவல், பல்பொருள் சூளாமணி, கைலாசநிகண்டு சூடாமணி, அபிதான மாலை, தொகை அகராதி முதலாய நூல்களும் குறிப்பிடத்தக்கன. அகராதி மோனைக் ககராதி எதுகை, நவமணிக்காரிகை நிகண்டு ஆகியவை இன்னும் அச் சிடப் பெறவில்லை எனத் தெரிகின்றது. இன்னும் சோதிடம், மருத் துவம் முதலிய பல்வேறு துறைகளிலும் உள்ள நிகண்டு நூல் களை நன்கு பரிசோதித்து வெளியிடவேண்டுவது அவசியமாகும்.

## சூடாமணி நிகண்டு

'ஒருசொற் பலபொருள் விளக்கம்' என்னும் இந்நூல் மண்டல புருடர் வழங்கிய சூடாமணி நிகண்டின் பதினொன்றாம் தொகுதி யாகிய ஒருசொற் பல்பொருட்டொகுதியின் விளக்க நூல் ஆகும்.

முன்னாளில் நிகண்டுகள் எல்லாம் பாடலாய் அமைந்து மனப் பாடம் செய்து போற்றும் நிலையில் எழுந்தன. ஆனால், உரைநடை வளர்ச்சி பெற்றுவரத் தொடங்கிய 18, 19ஆம் நூற்றாண்டுகளில் நிகண்டுப் பொருள்களை உரைநடையில் விளக்கும் முயற்சிகளில் புலவர் பெருமக்கள் ஈடுபடலாயினர்.

நிகண்டுச் சொற்பொருள்களை ஆதாரமாய் வைத்து அகராதி யடைவில் சொற்பொருள்களைத் தொகுத்து கி.பி.1732ஆம் ஆண் டில் வழங்கிய பெருமை வீரமாமுனிவரையே சாரும். தமிழில் உரைநடை அகராதிகளில் தோற்றத்திற்கு வழிகாட்டிய முதல் நூல் வீரமாமுனிவரின் சதுரகராதியேயாகும். பொருளகராதி, தொகை யகராதி, தொடையகராதி என நான்கு கூறாக அவர்தம் அகராதி அமைந்துள்ளது. இவ்வாறு அமைக்க அவர் முற்பட்டதற்கு நிகண்டு களின் அமைப்புமுறை தழுவியமையே காரணமாகும்.

பின்னர் வரவர முந்திய நிகண்டுகளுக்கு உரை விளக்கம் சேர்த்து, அவ்வந்நிகண்டுகளைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்கள் அச்சிட்டு வெளியிடலாயினர். இதனால் செய்யுள் வடிவில் படிக் கின்ற பாடலில் இடம்பெற்ற நிகண்டுப் பொருள்களை அடுத்து எளிதில் உரைபாடத்திலும் கண்டு தெளிவுபெற வாய்ப்பு நேர்ந்தது.

சூடாமணி நிகண்டு தமிழ் கற்போரால் முடிமணியாகப் போற் றப்பெற்றுவந்த ஒரு பெருநூல். எனவே, இந்நூலை விளக்க உரையுடன் பதிப்பாசிரியர் பலர் வெளியிட முன்வந்தனர். எனவே, ஏனைய நிகண்டுகளைவிடவும் இந்நூலுக்கு ஏற்பட்ட பதிப்புகள் பலவாகும். என்றாலும், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் பதிப்பித்த பதிப்பே எல்லாவற்றிலும் சிறந்ததாகப் போற்றப்படு

கிறது. இவருடைய பதிப்பு இதுநாள்வரை 18க்கும் மேற்பட்ட பதிப்புகளைப் பெற்ற பெருமையுடையதாகும்.

பொதுவாக நிகண்டுகளில் அமைந்துள்ள ஒருசொல் பல பொருள் தொகுதியே அகராதிநிலையில் சொற்பொருள் விளக்கும் பாங்குடையது. ஆகவே, சூடாமணி நிகண்டின் 11ஆம் தொகுதியாகிய ஒருசொல் பலபொருட்டொகுதியைப் 'பதினோராவது நிகண்டு' என்றே சிலர் உரை விளக்கத்தோடு தனிப் புத்தகமாக வெளியிட்டுள்ளனர்.

## ஒருசொல் பலபொருள் விளக்கம்

இத்தொகுதியில் அமைந்துள்ள சொற்களையும் பொருள்களையும் எளிதில் அறிந்து கொள்ளும் வண்ணம் அகராதி முறையில் அமைத்துத் தந்துள்ள நூலே 'ஒருசொற் பலபொருள் விளக்கம்'. பாடசாலை மாணவர்களுக்கு எளிதில் புரியவேண்டிப் பதினோராவது நிகண்டில் விளக்கப் பெற்ற பலபொருளோடு சொற்களை அகராதி வரிசையாகத் தந்து அடுத்துப் பொருளும் விளக்கமும் அமைத்துள்ளார் இந்நூலாசிரியராகிய அண்ணாசாமிப்பிள்ளை.

சொல் - பொருள் - விளக்கம் என்னும் முத்தலைப்பில் மூன்று பத்தியாக ஆசிரியர் இந்நூலை ஆக்கியுள்ளார். பின்னிணைப்பாகச் சூடாமணிப் பதினோராவது நிகண்டுப் பாடல்கள் 310ஐயும் சேர்த்துள்ளார். சொற்களுக்கு மண்டலபுருடர் தம் பாடலில் தந்த விளக்கத்தை அவர்தம் பாடலில் கூறிய முறையிலேயே பொருட் பகுதியில் கொடுத்துள்ளார். விளக்கப் பகுதியில் இந்நூலாசிரியர் மண்டல புருடர் உரைத்த பொருள்களுக்குரிய மாற்றுச் சொற்களையே பெரும்பாலும் அமைத்துள்ளார். இதனால் பல இடங்களில் விளக்கப்பகுதி இயற்சொற்களாய் அமையாமல் திரிசொற்களாகவே உள்ளன. ஈற்றில் ஒவ்வொரு சொல்லுக்குரிய பொருள்களில் எண் தொகையையும் பிறைவளைவுக்குள் ஆசிரியர் காட்டியுள்ளார்.

பாடசாலைகளில் கற்கும் சிறுவர்களின் உபயோகத்திற்காகவே தாம் இந் நூலினைச் செய்வதாக நூலின் தொடக்கத்தில்

*அவர் பாடிய கடவுள் வணக்கப்பாடலில்,*

நிலவிய வுரவோ ரருளிய வொருசொன்
னிதழ்பல் பொருளுணர்த் திடுநூல்
அலகில வேனுஞ் சிறுவருட் பதிய
வருமைய வாகலி னினிதே
யுலகுந் தளித்தங் கழித்திடற் குரிய
வோர்மது வடியிணை பரவி
யிலகிய வொருசொற் பலபொருள் விளக்க
யியம்புதும் பயன்றநூற் பொருட்டே

*என ஆசிரியர் அண்ணாசாமிப் பிள்ளை தெரிவித்துள்ளார்.*

*உரைநடையில் அகராதிகள் அமைவதற்கு ஒருவழி காட்டியாக இந்நூல் உள்ளது. இதற்கு இராமநாதபுரம் சமத்தானப் புலவர் சிகாமணிகளுள் ஒருவரான பெருங்கருணை சோடசாவ தானி முத்தழகரையங்கரர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். அவர்தம் பாயிரம் வருமாறு:*

உலகசெந நிக்குமலை வருதிரு மகட்குமகிழ்
வுறவிவ ணுதித்த பெருமான்
உததியை மதித்தனு ளுறைகச டகற்றிநல
முயர்கதை யெடுத்தும் பர்நாட்
டிலகுபுல வர்க்குதவி யிசைபெரிது பெற்றதென
விறைவனது பத்தி நிறைவால்
எந்நாடு மேற்றுபுகழ் மன்னனண் ணாச்சாமி
யென்னுமபி தான வாணன்
அலகில்தமிழ் வாரிதியை யாலோச நாமதீத
மாக்கி யவனி தலத்தின்
அகிலமா னவர்களு மருந்தமிழ்ப் புலவரா
மாறு முன்னோ ருரைத்த
பலகலையி லுஞ்சிறந்துஞ் சுருங்கியு மினிய
பண்புடைய தான வொருசொற்

பலபொருள் விளக்கமெனு மமுதினை யளித்தனன்
பண்டிதர் கள்கொண் டாடவே

திருமால் பாற்கடல் கடைந்து அமுதத்தை எடுத்துத் தேவர் களுக்கு வழங்கியது போல இறைவனிடம் பத்தி பூண்டவரும், எந்நாட்டாரும் கொண்டாடும் புகழுடையாரும் ஆகிய அண்ணாச் சாமி தமிழ்க்கடலைக் கடைந்து தம் சிந்தனைத் திறத்தால் சுருக்க மும் இனிய பண்புகளுமுடைத்தான ஒருசொல்பல பொருள் விளக் கத்தினை அளித்தனன் என்பது முத்தழகரையங்காரின் பாயிரக் கருத்து.

இந்நூலாசிரியராகிய அண்ணாசாமிப் பிள்ளை சென்ற நூற் றாண்டில் வாழ்ந்த புலவர் பெருமகனாராவர். இவர், இந்து வித்தியாசாதன சங்கத்தின் செயலாளராயுமிருந்தார். நூலுக்கு உரைநடையில் இவர் எழுதியுள்ள பாயிரத்தில் செய்யுள் நூல்களை உரைநடையாகச் செய்யவேண்டும் என்னும் ஆர்வம் ஆங்கிலேயர் முதலிய மேனாட்டார் தொடர்பால் நேர்ந்த விளைவு என்பதனைக் குறிப்பிட்டுள்ளார். தாண்டவராய முதலியார், திருத்தணிகை விசாகப்பெருமாளையர், சரவணப் பெருமாளையர் போன்ற வித்து வான்கள் வசனத்தில் நூல்கள் எழுதியமையையும் எடுத்து உரைத்துள்ளார். இவருக்கு இந்நூல் இயற்றுவதில் விசாகப் பெருமாளையரும் உதவியுள்ளார். அவருடைய உதவிகளுக்கும் இவர் நன்றி தெரிவித்துள்ளார்.

ஒரு சொற் பலபொருள் விளக்கநூல் இந்து வித்தியாதான சங்கத்தார் கேட்டுக்கொண்டபடி அச்சங்கத்தில் காரியதரிசியாயி ருந்த அண்ணாசாமிப் பிள்ளையால் இயற்றப்பெற்றது என்பத னால் இந்து வித்தியாதன சங்கத்தார் இந்நூலுக்கு வித்திட்டவ ராவர். அந்நாளில் சிறந்து விளங்கிய புலவர்களாகிய விசாகப் பெருமாளையர் பேருதவியினால் 'ஹிந்து பிரஸ்' என்னும் அச்சுக் கூடத்தில் அச்சிட்டுச் சென்னையில் வெளிப்படுத்தினார். நூல் வெளிவந்த ஆண்டு சாலிவாகன சகாப்தம் 1772-ம் நிகழாநின்ற

சாதாரண வருஷமாகும். அதாவது 1850-ல் இந்நூல் அச்சில் வெளிவந்தது.

இற்றைக்கு நூற்று நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்குமுன் அச்சிடப்பெற்ற இந்நூல் புதைபொருள்போல இந்நாளில் மறைந்து கிடக்கிறது. மிகவும் அரிதாகவே இந்நூலின் படிகள் கிடைக்கின்றன. வில்வாரணி தமிழ்ப்புலவர் திரு. பா.பச்சையப்பனாரின் தமிழ் நூலகத்திலிருந்து இந்நூலின் படி ஒன்று கிட்டியது. இப்படியில் 9 முதல் 22ஆம் பக்கம் வரை இல்லை. நூலகங்களிலும் இந்நூலைத் தேடிக் கடைசியாகச் சென்னை மறைமலையடிகள் நூல்நிலையத்தில் இந்நூலின் ஒருபடி ஒன்று இருப்பது தெரியவந்தது. அங்குத் தேடியபோது பழம்பெரும் நூல்களுக்கிடையே இது மறைந்து கொண்டு பல நாள் காட்சிக்கரியதாயிருந்தது. நூலகர் திரு. குணசேகரன் விடாப் பிடியாய்ப் பலகாலம் தேடி ஒருவாறு இதனைக் கண்டுபிடித்துத் தகவல் தந்தார். அதன்பின் நூலகத்திற்கு நேரில் சென்று கிட்டுதற்குரிய இப்பழஞ்சுவடியைப் பார்த்து நூலுள் குறைவு பட்ட பகுதியை நிறைவாகச் செய்து முடிக்கப்பெற்றது.

நூலாசிரியரின் அனுமதியின்றி இந்நூலை யாரும் பதிப்பிக்கக்கூடாது என்று தாம் எழுதிய நூலின் உரைப்பாயிரத்தில் அரசாங்க ஆணைகளை எடுத்துக் காட்டிக் குறிப்புத் தந்துள்ளார் ஆசிரியர். அரசு ஆணை வரம்புகளுக்கு அப்பாற்பட்டுத் தனிவுரிமைக்கான காலம் கடந்து இந்நூல் பொதுவுடைமையாகி விட்டது. எனினும், இந்நூலின் மறுபதிப்பினை யாரும் இதுகாறும் வெளியிட்டிலர்.

முன்னாளில் அச்சிடப்பட்டு நீண்டகாலம் பதிப்பிக்கப் படாமல் மறைந்து கிடக்கும் நிகண்டு நூல்களையும் இதுவரை அச்சில் வாராத நிகண்டு நூல்களையும் அச்சிட்டு வெளியிடும் முயற்சியில் அனைவரும் ஈடுபடல் வேண்டும். முந்திப் பதிப்பித்த நிகண்டுகளில் பலவும் ஏடுகளின் துணையினால் மீண்டும் பரிசோதிக்கப்பெற்று வெளியிடும் நிலையில்தான் உள்ளன. அவற்

றுள்ளும் சில மூலபாடமாக மட்டுமே பதிப்பிக்கப்பட்டுள்ளன. மூலபாடங்களைச் சரிபார்த்து உரைவிளக்கம், சொற்பொருள் அகராதி முதலியனவும் சேர்த்து வெளியிட்டால்தான் அவற்றை எளிதில் இந்நாளில் பயன்படுத்த இயலும். நிகண்டு பற்றிய ஆய்வுகளுக்கும் நிகண்டுகளை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப்பெறும் தனி அகராதிக்கும் பயன்படும் வகையில் பல வகை அகராதி முதலியவற்றோடு கூடிய பதிப்பு மிகவும் இன்றியமையாததாகும்.

இங்குக் குறித்த நோக்கங்கள் நிறைவேறவேண்டுமானால் பலகாலம் தக்கார் அரவணைப்பும் பலருடைய உழைப்பும் வேண்டும். தனி ஒருவரால் எல்லா நூல்களையும் வெளியிடுவதென்பது இயலாததாகும். இவ்வகையில் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்களின் முயற்சியும், பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை அவர்களின் முயற்சியும் பெரிதும் குறிப்பிடத்தக்கன.

ஒரு சொல்பல பொருள் விளக்கம் - நூலின் ஆசிரியர் சொற்களை அகரவரிசையில் காட்டியுள்ளாரேயன்றி அந்தச் சொற்கள் பதினோராவது நிகண்டில் எந்தப் பாடலில் உள்ளது என்று குறித்திலர். இப்பொழுது ஒவ்வொரு சொல்லும் இடம்பெற்றுள்ள பாடல் எண்ணையும் அடுத்துத்தரப்பெற்றுள்ளது.

மேலும், சூடாமணி பதினோராவது நிகண்டின் மூலபாடத்தைச் சந்திபிரித்து, ஏற்ற நிறுத்தற்குறியீடுகளுடன் அமைத்துத் தரப் பெற்றுள்ளது. பொருள் விளக்கத்திற்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ள சொற்பகுதிகள் தனிப்படத் தடித்த எழுத்தில் காட்டப் பெற்றுள்ளன. அடைமொழியாக வந்துள்ள சொற்கள் பிறைவளைவுக் குறியிட்டுப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன. எனவே, பாடலை நோக்கிய அளவில் சொல்லையும் உரிய பொருள்களையும் எளிதாகக் காணும் வாய்ப்பு இம்முறையினால் வாய்த்துள்ளமை காணலாம். பாடபேதங்களும் அடிக்குறிப்பாகத் தரப்பட்டுள்ளன. செய்யுள் முதற்குறிப்பு அகராதி பதினோராம் நிகண்டின் சொற்

பொருள்கள் அனைத்தும் சேர்ந்த பேரகராதி ஆகியவையுந் தரப் பட்டுள்ளன.

இந்நிகண்டு நூலினை அச்சிடுவதற்குப் பெரிதும் ஈடு பாட்டோடு உதவிய உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் இராமர் இளங்கோ அவர்கட்கும் நிறுவனத்தார்க்கும் தமிழ்கூறு நல்லுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. அவர்கட்கு நன்றி. நல்லமுறையில் அச்சிட்டுதவிய பார்க்கர் கம்பியூட்டர்ஸ் அச்சகத்தாருக்கும் நன்றி.

**பயன்பட்ட நூல்கள்**

1. மு. சண்முகம் பிள்ளை & இ. சுந்தரமூர்த்தி (ப.ஆ.) திவாகரம் (இருதொகுதிகள் 1990, 1993), சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

2. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டு சொற்பொருட்கோவை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1982.

# பாயிரம்

தமிழ்ப் பாஷையைக் கற்கப்புகு மாணாக்கர்க்கு அப்பாஷை யிலுள்ள இலக்கணவிலக்கிய நூல்களெல்லாஞ் சூத்திரங்களாக வும் வெண்பா முதலிய பாக்களாகவும் பாவினங்களாகவும் அவற் றின் உரைகளுஞ் செய்யுணடையனவாகவும் அவற்றை உணர் தற்கு இன்றியமையாக் கருவி நூலாயிருக்கின்ற நிகண்டுகளும் சூத்திரங்களாகவும் விருத்த முதலிய செய்யுள்களாகவும் இருக் கின்றமையால் அவைகளைக் கற்பது அருமையாகவிருக்கின் றமை கண்டும் இக்காலத்தில் இத்தேசத்தையாளுகின்ற அதிகாரி களாகிய இங்கிலஷீக்காரர் முதலியோர்கள் பெரும்பாலும் செய் யுளையொழித்து எல்லா நூல்களையும் வசனங்களாகவே செய்து கொண்டிருக்கின்றமையால் அப்பாஷையைக் கற்கின்றவர்கள் சின்னாளில் எண்ணிற் பல நூல்களையுங் கற்பதைக் கண்ணுற்றும் இக்காலத்திலுள்ள வித்துவான்களும் பாடசாலைகளின் பிரபுக் களும் உபாத்தியாயர்களும் அந்நூல்களனைத்தையும் வசனரூப மாகச் செய்ய வேண்டுமென்னுங் கருத்தைக் கொண்டிருக்கின் றனர் இக்கருத்தைக் கொண்டே ம.ரா.சா.ஸ்ரீ தாண்டவராய முதலி யார் - திருத்தணிகை விசாகப்பெருமாளையர் - சரவணப்பெருமா ளையர் - முதலிய சில வித்துவான்கள் இலக்கணம் - பூகோளக் கோள முதலிய நூல்களை வசனரூபமாகச் செய்தும் - நன்னூல் - திருக்குறள் முதலிய நூல்களுக்கு யாவரும் எளிதிலுணர உலக வழக்காகிய இயற்சொற்களால் பதவுரையும் விசேஷவுரையுஞ் செய்தும் அச்சிற் பதிப்பித்திருக்கின்றனர் அவை பாடசாலை களுக்கு மிகவும் உபயோகமுள்ளவையாயிருக்கின்றன இலக் கணவிலக்கிய நூல்களை அறிவதற்கு முன்னர் ஒரு தலையாகக்

கற்கவேண்டிய நிகண்டுகளுள் சிறந்ததாகிய சூடாமணி நிகண்டில் ஒரு பொருட் பலசொற்றொகுதிகளாகிய பத்துத் தொகுதிகட்கும் மேற்படி தாண்டவராய முதலியார் பதப்பொருளாகவுரை செய்து அச்சிற் பதிப்பித்திருக்கின்றனர் அது பாடசாலைகளிற் பயனுற்று வருகின்றது அந்நிகண்டில் அப்பத்துத் தொகுதிகளிலும் அதிக வுபயோகமான பலபொருளொடு சொற்றொகுதியாகிய பதினோ ராவது தொகுதியைத் திரவிட பாடசாலைகளில் வாசிக்கும் வித்தி யார்த்திகளில் அக்கரவரிவடிவுகளை நன்குணர்ந்த சிறுவர்களுக் கும் எளிதிற் பயன்படக் கருதி அதன்மூலமாகிய பாடல்கள் ஒவ் வாமல் இருந்தமையாற் பல புத்தகங்களைக் கொண்டு பாடல்கள் பிரதிகளோறும் ஒன்றற்கொன்று ஒவ்வாமல் இருந்தனமையாற் பல புத்தகங்களைக் கொண்டு அவ்வழுக்களையெல்லாங் களைந்து சுத்த பாடமாக்கியும் அதிற் கூறப்பட்ட பலபொருளொரு சொற் களை அகராதி வரிசையாக இயைத்தும் அவற்றின் பொருள் களாகிய மொழிகளைப் பிரதிபதங்களால் விளங்கச் செய்தும் அதற்கு ஒருசொற் பலபொருள் விளக்கமென்னும் பெயர்புனைந்து அச்சிற் பதிப்பித்தனன்.

இதைப் படிப்பவர்கள் இதிற்கண்ட வழுக்களையெனக்கறி விப்பாராயின் அவற்றை நன்றியறிதலோடேற்றுக்கொண்டு பிழை திருத்தத்திலாவது இரண்டாம் பதிப்பிலாவது திருத்திக் கொள்வது மன்றி அவர்களுக்கு என் வந்தனங்களையுஞ் செலுத்துவேன்.

கனம்பொருந்திய கௌரன்மென்றாரால் விஸ்தாபிக்கப் பட்ட யுனிவர்சிட்டியென்னுஞ் சாத்திர பாடசாலையில் தமிழ்த் தலை மைப்புலமை நடாத்தும் வித்துவச் சிரோமணியாகிய ம.ரா.ரா. ஐயர வர்கள் திருத்தணிகை விசாகப் பெருமாளையரவர்களுடைய பேரு தவியினால் இப்புத்தகம் நிறைவேறினபடியால் அவருடைய லோகோபகாரமான சிந்தனையைக் குறித்து அவரது நற்புகழைக் கொண்டாடுவது எனக்குக் கடனாயிருப்பதுபோல இப்புத்தகத் தைப் படிக்கும் யாவர்க்கும் கடனாயிருப்பதாக.

இந்தக் கிரந்தகர்த்தாவி னனுமதியின்றி யிப்புத்தகத்தை யச்சிற் பதிப்பிக்கின்றவர்களும் அதைப் பதிப்பித்த வச்சுக்கூடத் தலைவர்களும் கஅச - ஜனவரி உருவனதால் பதிப்பிக்கப்பட்ட கனம் பொருந்திய கௌரன்மென்று கேஜட்டியென்னும் பத்திரிகை யில் பிரசுரஞ் செய்த - கஅசஎ த்து - 20வது - ஆக்டின் - கஉ-வது- பிரகரணங்களிற் கூறியபடி இந்தக் கிரந்தகர்த்தாவால் வழங் கப்படும் நஷ்டத்துக்கு சூத்திரவாதிகளாகக் கடவர்களென்று யாவருமறிவார்களாக.

---

இது 1850ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற 'ஒருசொற் பல பொருள் விளக்கம்' என்னும் நூலிற்கு அதன் ஆசிரியர் அண்ணா சாமிப்பிள்ளை எழுதிய பாயிரம். பத்திமுடிவில் முற்றுப்புள்ளிதவிர இடையில் வாக்கிய முடிவுகளுக்குப் புள்ளியின்றியிருப்பதும் கவனிக்கத்தக்கது. இன்றைக்கு ஏறத்தாழ 150 ஆண்டுகளுக்கு முன் புலவர்கள் எழுதிய உரைநடைக்கு இது ஓர் எடுத்துக் காட்டாகும்.

# சூடாமணி நிகண்டு

## காப்பு

முடிவுஇல் இன்பத்து மூவா
முதல்வனைப் போற்றி செய்தே
அடிதொறும் இரண்டும் ஒன்றும்
ஆதியில் பொருள் அடக்கி
நடைபெறு ககரம் ஆதி
னகரவீறு எதுகை யாகப்
படியில் ஓர்சொற் பொருட்பல்
விதத்தொகை பகர லுற்றாம்.

### ககர எதுகை

1. **பகவனே** ஈசன், மாயோன்,
பங்கயன், சினனே, புத்தன்;
**பகலே**நாள், ஒருமுகூர்த்தம்,
பகலவன், நடுவை, தேசு;
**மகரமே** சுறாப், பூந்தாது ஆம்;
வசி கூர்மை, வசியம், வாளே;
**அகம்** மனம், மனையே, பாவம்,
அகலிடம், உள்ளும் ஆமே.

2. **சிகரி**கோ புரமே, வெற்பு,
சீறெலி, கருநா ரைப்பேர்,
**சிகமிகை** மயிர்முடிப்பேர்,
சிறந்த வாசிகை, தேமாலை;
**சிகரமே** மலையி னுச்சி,
திரை, சென்னி, திவலை, வெற்பு ஆம்;
**மகம்**யாகம், ஓர்நாள் என்ப;
மாய்பு என்ப மறைவும், சாவும்.

3. **இகல்**பகை, வலி, போர், முப்பேர்;
**இகுளை**யே தோழி, நட்பு ஆம்;
**புகர்**என்ப மழைக்கோள், குற்றம்,
புற்கெனும் நிறமும் முப்பேர்;
**நகமலை**, உகிர், மரப்பேர்
**நகை** மகிழ்வு, ஒளி, சரிப்பு ஆம்;
**ககனம்** விண்ட, படை, காடு என்ப;
கடவுள்தே, முனி, நன்மைப்பேர்.

4. **சாகம்** சாகினி, வெள்ளாடு,
தேக்குஎனும் தருவும் ஆமே;
**பாகலே** கால வல்லி,
பலா என்றும் பகரலாமே;
**யூகமே** கருங்குரங்கோடு,
உட்பொரு குணர்தல், தர்க்கம்;
**நாகம்**வின், குரங்கு, புன்னை,
நற்றூசு, மலை, பாம்பு, யானை.

5. **திகிரி**யே மூங்கில், வட்டம்,
தேருருள், ஆழி, வெற்புஆம்;
**சிகி**என்ப மஞ்ஞை, தீ ஆம்,
தீதுறு கேதுவும் பேர்;
**ஞெகிழி**யே சிலம்பின் நாமம்,
நெருப்புறு கொள்ளிக் கும் பேர்;
**எகினமே** புளிமா, ஞாளி,
கவரிமா, நீர்நாய், அன்னம்.

6. **ஆகுவே** எலியின் நாமம்,

ஆம்பெருச் சாளிக் கும்பேர்;

**யோகமே** தியானம், கூட்டம்,

உபாயம் ஆம், உயர்ச்சிக் கும்பேர்;

**போகி** இந்திரன், பாம்பு என்ப;

போகில் புட்பொதுப், பூமொட்டு ஆம்;

**கோகிலம்** குயில், பல்லிப்பேர்;

**குடங்கரே** குடிசை, கும்பம்.

7. **பொருட்டுத்** தாமரைப் பூங்கொட்டை,

பொருப்புச் சேற்றுஎழுந்த கொப்புள்;

**இரித்தலே** செகுத்தல், வீழ்த்தல்,

இரித்தலோடு, அழைத்தல் ஈதல்;

**புகைக்கு** இடு நாமம் தூமம்,

போற்றும் யோசனைக்கும் பேரே;

**அகைத்தல்** வேதனை, ஒடித்தல்

அறுத்திடல், உயர்த்தல் ஆமே.

8. **சிக்கமே** குடுமி நாமம்,

சீப்புடன், உறியும் ஏற்கும்;

**கொக்கு** மாமரமே, செந்நாய்;

குரண்டமே, குதிரை, மூலம்;

**வக்கிரம்** கொடுமை, மீளல்,

மடங்குத லுடனே, வட்டம்;

**சக்கிரி** குயவன், செக்கான்,

தராபதி, நெடுமால், பாம்பு.

9. தூக்குஎன்ப பாட்டும், கூத்தும்,
துலாமும், ஆராய்தலும்பேர்;
பாக்கு என்பது எதிர்காலத்தைப்
பகர்இடைச்சொல், துவர்க்காய்;
மேக்கு மேற்றிசை, மேலும்பேர்;
மெய்உண்மை, உடலும் ஆமே;
ஊக்கமே வலி, உற்சாகம்,
உள்ளத்தின் மிகுதிக்கும் பேர்.

10. பகடுஇபம், பெருமை, ஏறு,
பஃறி, ஆண்மேதி ஐம்பேர்;
தகடுஇலை, ஐம்மை என்ப;
தபனனே இரவி, தீபஆம்;
அகடு என்ப நடுவே, குக்கி;
அருள்என்ப கருணை, சத்தி;
மகரந்தம் கள்ளும், தேனும்,
மலர்த்தாதும் வழங்கும் முப்பேர்.

11. சகுந்தம் புட்பொதுவே, கங்கம்;
சடை என்ப வேணி, வேர் ஆம்;
சிகண்டியே பாலையாழின்
திறத்திசை, மயில், அலிப்பேர்;
சகுனிபுள், நிமித்தம் பார்ப்போன்;
சமம் என்பது அமர், ஒப்பு ஆகும்;
சகுனமே கிழங்கு, புள்ளின்
சாதியும், நிமித்தமும் பேர்.

12. **சக்கரம்** பெருமை, ஓர்புள்
தரணியே, பிறப்பு, வட்டம்,
மிக்கதேருருளே, ஆழி,
வரைஎன விளம்பும் என்பேர்;
**பக்கம்** புட்சிறகு, நட்பு,
பகர்திதி, அருகும் ஆகும்;
**நக்கனே** அருகன், சம்பு,
நிருவாணி நாட்டும் முப்பேர்.

13. **பூகமே** திரளை, பூகம்;
**புன்கண்** என்பது நோய், துன்பம்;
**வாகுவே** அழகு, தோள் ஆம்;
**மாசி**யே மகம், ஓர்மாதம்;
**பாகமே** பிச்சை, பங்கு ஆம்;
**பயோதரம்** புயலே, கொங்கை;
**வாதை** பண்பு, ஒழுக்கம், வெற்றி,
தவம், தொழில், வழுங்கல், மிக்கு ஆம்.

14. **நோக்கு** என்பது அழகு, பார்வை;
**நுதல்** என்ப புருவம், நெற்றி;
**சேக்கை**யே மிருகம் துஞ்சும்.
இடம், முலை, சிறந்த பாயல்;
**பூக்க**மே கமுகு, ஊர் என்ப;
**புலிங்**கம் தீப்பொறி, ஊர்ப்புள் ஆம்;
**ஆக்கம்** பூமகள், செல்வப்பேர்;
**அறல்** கருமணல், நீர் ஆமே.

15. **சீகரம்** கரகம், வீசும்
கவரியும், திவலையும் பேர்;
**சாகரம்** துயிலொழித்தல்,
சமுத்திரம் இருபேர் சாற்றும்
**காகுளி** தவிசு, கண்டத்து
எழும்ஒலி, இசையும் காட்டும்;
**ஈகை** பொன், கொடை, ஈங்கைப்பேர்;
**இரவி**யே மலை, ஆதித்தன்.

16. **தகை** என்பது அழகு பண்பு
தயையொடு, பெருமை நாற்பேர்;
**அகி** என்பது அரவு, இரும்புஆம்;
**அரிட்டமே** கள்ளு, காக்கை;
**ககம்** என்பது அம்பு, புள் ஆம்;
**கடுத்**தல் ஒப்ப, ஐயம், வேகம்;
**அகவல்**பா, மயிற்குரல், கூத்து;
**அந்தமே** அழகு, ஈறு என்ப.

17. **அக்கு** என்பு, விடைமுரிப்பும்,
அணிசங்கு மணியும் ஆகும்;
**நக்க**வே நகை, உண்டற்பேர்;
**ஞாட்பு** அமர், பாரம், கட்டம்;
**இக்கு**என்ப கரும்பு, கள்ஆம்
**ஈரமே** குளிர்ச்சி, அன்பு;
**மக்கள்** மானுடர், சிறார்பேர்;
**வரைத**லே கொள்ளல், நீக்கல்.

18. **கேகயம்** மஞ்ஞை, ஓர் பண்,
அசுணமாக் கிளத்தும்முப்பேர்;
**தோகையே** மயில்வால், மஞ்ஞை,
விலங்கின்வால், சொல்லும் முப்பேர்;
**போகமே** பாம்பின் மெய்யும்,
போகத்தின் விகற்பும் ஆகும்;
**போகுதல்** நெடுமை, நீர்மை,
போகுதல் எனும்முப்பேரே.

19. **கைக்கிளை** இசைவிகற்பம்,
ஒருதலைக் காமமும்பேர்;
**சுக்கை** தாரகை, மாலைப்பேர்;
**சூத்திரம்** பொறி, நூல், நூற்பா;
**எக்கரே** சொரிதலோடு,
குவிதலும் இருபேர் என்ப;
**மொக்குளே** குமிழி, பூவின்
முகிழ்என மொழிய லாமே.

**ஙகர எதுகை**

20. **புங்கமே** உயர்ச்சி, அம்பு
பொரும் அம்பின் குதைமுப்பேரே;
**திங்கள்** அம்புலி, மாதம்பேர்;
**சித்திரன்** ஓவன், துச்சன்;
**கங்கு** என்ப வரம்பின் பக்கம்,
கருந்தினை, பருந்தும், ஆமே;
**தொங்கலே** பீலிக் குஞ்சம்,
தூக்கொடு, தொடுத்த மாலை.

21. **சங்கமே** கணைக்கால், ஓர்எண்,
சபை, சங்கு, புலவர், நெற்றி
**பங்கு** என்ப மூடமே ஆகும்
பாதியும், சனியும் ஏற்கும்;
**வங்கமே** வெள்ளி, நாவாய்,
வழுதலை, ஈயம் ஆமே;
**அங்கணம்** சேறு, முற்றம்
ஆம், சலதாரைக்கும் பேர்.

22. **ஞாங்கர்** வேல், பக்கம், முன்பு,
மேல் என நான்கும் ஆகும்;
**தூங்கலே** நிருத்தம், யானை,
துயில், சோம்பு, தராசு, தாழ்தல்;
**வாங்கலே** வளைத்தல், கொள்ளல்;
வைஎன்ப கூர்மை, வைக்கோல்;
**வேங்கை** பொன், புலி, மரப்பேர்;
வீநீக்கம், பூப் புள், சாவு ஆம்.

23. **மங்குல்** கார், இருள், விண் முப்பேர்;
**மருந்து** அமுதொடு, மருந்து ஆம்;
**பங்கியே** பிறமயிர்க்கும்
பகரும், ஆண்மயிர்க்கும் பேர் ஆம்;
**அங்கிதம்** பன்னகம், தோள்
அணியுடன், வசைச்சொல் ஆகும்;
**பங்கமே** சேறு, தூசு,
பழுதொடு, பின்னம் ஆமே.

24. **அங்கமே** உடல், உறுப்பு, என்பு,
ஆறு அங்கம், கட்டில் ஐம்பேர்,
**பிங்கலம்** பொன்னும், பொன்னின்
நிறத்தையும் பேசல் ஆகும்;
**பொங்கரே** மரத்தின் கோடு,
பொருப்பு, உயர் இலவுமுப்பேர்;
**பொங்கலே** கொதித்தல், மிக்கு ஆம்;
**பொச்சாப்பு** மறவி, தீது ஆம்.

**சகர எதுகை**

25. **பாசம்**, என்ப சுற்றம்,
பாண்டம், உண்கலமும் பன்னும்;
**வாசமே** இருப்பிடம், பூ –
மணம், புள்ளின் இறகு, தூசு ஆம்;
**கோசமே** மதிலுறுப்பு, ஆண் –
குறி, முட்டை, முறை, பண்டாரம்;
**தேசிகன்** வணிகன், தேசாந் –
தரியொடு, குருவும் ஆமே.

26. **மூசல்** மொய்த்திடல், சா என்ப;
**முடலை**யே திரட்சி, உண்டை;
**கீசகம்** குரங்கு, வேய் ஆம்;
**கேழ்** நிறம், ஒளி, ஒப்பு ஆகும்;
**வீசலே** எறிதல், ஈவு ஆம்;
**வெம்மை** உட்டணம் விருப்பம்;
**கேசரம்** மகிழ், பூந்தாது ஆம்;
**கிருட்டி** ஓரிற்றாப், பன்றி.

27. **அசி** படைக்கலமே, வாளே,
அவமதிச் சிரிப்பு முப்பேர்;
**நிசி** இரா, மஞ்சள், பொன் ஆம்;
நீர் புனல், குணம், பூராடம்;
**பிசி** என்ப பொய்யும், சோறும்,
பேசரும்பொருளும் முப்பேர்;
**சுசி** கோடை, சுத்தம், தீஆம்;
சுடர் விளக்கு, இரவி, அங்கி.

28. **ஆசு** என்ப விரைவு, குற்றம்,
அற்பம், மெய்க்கவசம் நாற்பேர்;
**காசு** என்ப கோழை, குற்றம்,
கதிர்விடு மணி முப்பேரே;
**ஆசினி** பலா விசேடம்,
மரவுரி, மரக்காழ், விண் ஆம்;
**தேசிகம்** அழகு, காந்தி,
திசைச்சொல், ஓர்கூத்து, செம்பொன்.

29. **பச்சை**யே மரகதம், தோல்
பரிமளப் புதல், மால், புந்தி,
**கச்சை** என்பது தழும்பு,
கயிறொடு, கவசம் முப்பேர்;
**செச்சை** மை, வெட்சி, தேய்வை;
**திசை** என்ப திசை, சுணங்கு ஆம்;
**மிச்சை**யே பொய்த்தல் ஆகும்,
மிடித்தல், அஞ்ஞானம் முப்பேர்.

30. **பிச்சம்** ஆண் மயிரும், பீலிக்
குடையும் வெண்குடையும் ஆகும்;
**கச்சம்** யானைக் கழுத்திற்
கயிறு, அளவொடு, மரக்கால்;
**எச்சமே** குறை, சேய், யாகம்;
**இபம்** என்ப மரக்கோடு, யானை;
**அச்சமே** அகத்தி, ஐம்மை,
அஞ்சல் இம்முப்பேர் ஆமே.

31. **ஆசையே** திகை, பொன், அன்புஆம்;
**ஆகுலம்** வருத்தம், ஓசை;
**காசையே** காயா, நாணல்;
**காமர்** தான் அழகு, காதல்;
**பாசமே** கயிறு, கூனி,
பகர் ஊசித்துளை, அன்பு, ஆகும்;
**தூசு** என்பது ஆடை, யானைப்
புரசை, தூசிப் படைப்பேர்.

32. **தாசி**யே பரணி, சூளை;
**தளி** என்பது சூளியே, கோயில்;
**வேசரி** கழுதையே, கோ
வேறு வேசரியும் ஆகும்;
**ஆசுகம்** பகழி, காற்று ஆம்;
**அந்தரி** உமையே, துர்க்கை;
**கோசிகம்** சாம வேதம்,
கூறு பட்டாடைக்கும் பேர்.

33. **பசு** ஏறு, சீவன், ஆஆம்;
**பாரதி** வாணி, தோணி;
**வசுவே** ஆன்கன்றும், பொன்னும்,
வசுக்களும், தீயும் நாற்பேர்;
அசம் மூவாண்டுறு நெல், ஆகு ஆம்;
**அணை** என்ப கரையே, மெத்தை;
**சசி** என்ப கர்ப்பூரம்,
சந்திரன், அயிராணி முப்பேர்.

34. **விசும்பு** பொன்னுலகு, மேகம்,
விண்ணொடு, திசையும் நாற்பேர்;
**தசும்பு**நற் குடம், மிடா ஆம்;
சாத்தனே அருகன், ஐயன்;
**இசை** புகழ், கிளவி, பாட்டுஆம்;
**ஏங்கலே** ஒலி, இரங்கல்;
**பிசுனனே** கோளன், பொய்யன்,
உலோபனும் பேசும் முப்பேர்.

35. **வச்சிரம்** சதுரக் கள்ளி,
வைரமே, குலிசம் முப்பேர்,
**நொச்சி**யே சிந்துவாரம்,
மதில், சிற்றூர் நுவலலாமே;
**தச்சனே** சித்திரைப்பேர்,
தபதியன் தானும் ஆகுத்;
**உச்சி** நண்பகல், உச்சிப்பேர்;
**உறுப்பு** அவயம், உடம்பு ஆம்.

36. **பாசு**என்ப பசுமை, மூங்கில்;
பப்பு என்பதுரப்போடு, ஒப்பு ஆம்;
**மாசு** என்ப சிறுமை, குற்றம்,
மழை, அழுக்கொடு, நாற்பேரே;
**கேசம்** பெண்மயிர்க்கும், ஆண்பால்
மயிருக்கும் கிளத்தல் ஆகும்;
**வாசி**யே குழல், முன்னாள், மா,
வாசி என் ஏவல் நாற்பேர்.

37. **மிசை** என்பது உணவும், மேடும்,
மீமிசைச் சொல்லும் முப்பேர்;
**விசயமே** வென்றி, வெல்லம்,
வெங்கதிர் மண்டலப்பேர்;
**முசலி**யே உடும்பு, தாழை,
முந்திய இராமன், ஒந்தி;
**வசதி** நல்லிடம், ஊர், வீடு ஆம்;
**வரன்** அயன், பரமன், காந்தள்.

**ஞகர எதுகை**

38. **துஞ்சலே** நிலைபேறு ஆகும்,
தாயில், சோம்பு, சாவும் ஆகும்;
**பஞ்சரம்** செருந்தி, கூடு ஆம்.
பரதரே கழியன், நாய்கர்;
**கஞ்சமே** தாளம், குல்லை,
கமலம், வெண்கலம், வட்டப்பம்;
**குஞ்சம்** ஈயோட்டி, நாழி
குறள் குன்றி, குறளைச் சொல்லே.

39. **நெஞ்சு** என்ப மனம், மார்பின் பேர்;
**நிழல்** செல்வம், குளிர்ச்சி, சாயை;
**மஞ்சு** பூண், வலி, வனப்பு,
மழை, யானை, முதுகு இவ் ஐந்தே;
**வஞ்சி** மேற்செல்வோர், ஊர், பா,
வல்லி மென்மருங்குற் பெண் ஆம்
**தஞ்சமே** எளிமை என்ப,
தரு பற்றுக்கோடும் ஆமே.

40. **அஞ்சனம்** கறுப்பு, மை, திக்கு
ஆனையில் ஒன்று முப்பேர்;
**மஞ்சரியே** பூங்கொத்து,
மாலை, செந்தளிரும் ஆகும்;
**அஞ்சலி** வணங்கல், வாவல்.
பறவையும் ஆகும் என்ப;
**இஞ்சியே** புரிசை, இஞ்சி;
எறும் என்ப வலி, தண்டு ஆமே.

41. **கிஞ்சுகம்** முருக்குச், செம்மை;
**கிருட்டிண** ன்தான் மால், பார்த்தன்;
**கஞ்சனமே** கண்ணாடி
காக்குருவிக்கும் பேரே;
**பஞ்சமே** சிறுமை, ஐந்து ஆம்;
**பகழி** அம்பு, இதன் குதைப்பேர்;
**வஞ்சனை** மாயை, பொய் ஆம்;
**மாயன்** மால், கருநிறத்தோன்.

42. **குஞ்சி** ஆண்மயிர், புட்பார்ப்பு,
குன்றியின் கொடி முப்பரே;
**வஞ்சமே** கபடம், வாள் ஆம்;
மாயம் வஞ்சனை, பொய் என்ப;
**கஞ்சனே** குறளன், வேதன்;
**களங்கம்**தான் அழுக்கு, குற்றம்;
**கஞ்சிகை** சிவிகை, ஆடை,
கட்டிடு திரையும் ஆமே.

**டகர எதுகை**

43. **நடலை** வஞ்சனை, பொய் என்ப,
நடுங்கிய துடக்கம் முப்பேர்;
**மடல்** பனையேடு போல்வ,
மலரிதழ், ஒர் நூற்கும் பேர்;
**படர்** நடை, நினைப்பு, நோ ஆம்,
பகர்ந்திடில் வீரர்க்கும் பேர்;
**குடம்** நகர், பசு, ஒர்கூத்து,
கும்பமே, கரும்பின் கட்டி.

44. **மாடமே** உழுந்தோடு, இல் ஆம்;
மழை என்ப குளிர்ச்சி, மேகம்;
**கூடம்** இல், மறைவு கொல்லன் –
சம்மட்டி, குவட்டினுச்சி;
**சேடன்** ஒர் சாரி, பங்கன்,
செகம் தாங்கும் அனந்தன் என்ப;
**கேடகம்** பரிசை, வேறு ஒர்,
கேடு இல் ஊர், பலகை முப்பேர்.

45. **இடங்கரே**, முதலை, தூர்த்தர்,
குடங்கர் முப்பேர் என்ப;
**முடங்கலே** மடங்கல், கைதை,
மூங்கில், நோய், ஓலை ஐம்பேர்;
**படங்கு** மேற்கூட்டி என்ப,
பகர்பெருங் கொடியும் ஆகும்;
**விடங்கம்** ஏர், கொடி, கொடுங்கை,
**மிதவை**யே தெப்பம், சோறு ஆம்.

46. **குடிஞை** புட்சிபொதுவும், யாறும்,
கூகையும் ஆகும் என்ப;
**தடி**வயல், உலக்கை, 'வில்லுத்.
தண்டு, மின், தசை, உடும்பு ஆம்;
**தொடி** வளை, ஒருபலப்பேர்,
சூழ்ந்த கங்கணமும் ஆகும்;
**மடி** அடங்குதலே, சோம்பல்,
வயிறு, நேய், புடைவை, தாழை.

47. **படி**வமே வடிவம், நேன்பு ஆம்;
**பந்தமே** நினையும், கட்டும்;
**வெடி** அச்சம், பரிமளிக்கும்
மென்புகை, வெளிஇம் முப்பேர்;
**துடி** ஏலம், பறை, காலப்பேர்;
**தூத்**தூய்து, ஊன், பற்றுக்கோடு ஆம்;
**கொடிறு** பூசம், கதுப்பு ஆம்;
**குரவை**யே கடல், ஓர் கூத்து.

48. **கடிகை** நாழிகையே, துண்டம்,
கதவிடு தாழே முப்பேர்;
**படிறு** பொய், களவு இரண்டு ஆம்;
**பகர்தலே** விற்றல், பேசல்;
**கூடிகையே** மகுடம், உச்சி,
சுட்டியும், இட்ட பேரே;
**இடி** இடிப்பெயரே, நென்மா,
ஏற்றிடும் உறுதிச்சொல்லே.

49. **நாடி** நாழிகை, நரம்பு ஆம்;
நந்தல் கேடுடனே, ஆக்கம்;
**பாடியே** நகரம், நாடு;
பாசறை, ஆயர் ஊர்ப்பேர்;
**கோடிகம்** துகில், பூந்தட்டு ஆம்.
குடம்பையே முட்டை, கூடு;
**கோடி** எண், புதுமை, தூசுஆம்;
**குடுமியே** வெற்றி, உச்சி.

50. **உடு** விண்மீன், கிடங்கு, நாவாய்
ஒட்டும் கோல், அம்பில் ஈர்க்கு ஆம்;
**கடுவிடம்**, முள்ளுத் தானே
அரிதகி, கசப்பு நாற்பேர்;
**படு** மரக்குலையே, கள்ளு,
பரவு நீர்நிலை, நன்மைப் பேர்;
**புகுதலே** ஒலி, இன்னாதல்,
பகரில் உண்டாதல், பூத்தல்.

51. **மாடு** பொன், பக்கம், செல்வம்;
**வைகல்** வைகறை நாள், தங்கல்;
**கேடு** என்ப பெருமை, நன்மை,
திரட்சியே, அழகு நாற்பேர்;
**பாடு** இடம், பெருமை, ஓசை,
பட்டே, பட்டாடை, சிற்றூர்;
**ஈடு** என்ப குழைவே, ஒப்பே,
வலியொடு, பெருமையும் பேர்.

52. **மடை** என்ப, மதகு, சோறு,
மணிப் பணிக் கடைப்பூட்டும் பேர்;
**படை** படைக்கலம், கலப்பை,
படுக்கை, பல்லணமே, தானை;
**இடை** நடு என்ப, மற்றும்
இடப்பெயர், நுசுப்பும் ஆமே;
**மடம்** அறியாமை, சத்திரம்,
மன்னிய முனிவாசப்பேர்.

53. **வாடை** என்பதுதான் விதி.
வடகாற்றுத் தானும் ஆமே;
**ஆடு** மேழகம், வெற்றிப்பேர்;
**அல்கல்** நாள், சுருங்கல், வைகல்;
**கோடை** மேல்காற்றினோடு,
குதிரை, வெண்காந்தள் என்ப;
**ஓடை** நீர்நிலை, கிடங்கே,
ஒருமரம், வல்லி, பட்டம்,

54. **அடுப்பு** என்ப பரணி நாளே,
அச்சமே, கல்லி முப்பேர்;
**வடுச்** செம்பு, தழும்பு, வண்டு ஆம்;
**மத்தகம்** நெற்றி, சென்னி;
**இடக்கரே** மறைத்த வார்த்தை,
கும்பமும் என்ப நூலோர்;
**கடைப்பிடி** மறப்பிலாமை,
கருதிய தேற்றம் ஆமே.

55. **பட்டமே** ஒடை, தூசு,
பதவி, வாள், கவரிமா ஆம்;
**புட்டமே** காகம் ஆகும்,
புடவையும், நிறைவும் முப்பேர்;
**குட்டமே** தொழுநோய், ஆழம்,
குளம் எனப் பெயர்முப்பாற்றே;
**வட்டமே** பரிசை, நீர்ச்சால்,
வலயம், கைம்மணி, தூசு, ஊர்கோள்.

56. **திட்டையே** உரலும், மேடும்,
திண்ணையும் நண்ணும் முப்பேர்;
**தட்டை** வேண், அனைத்தாள், கிள்ளை –
தனைக்கடி கோலே, முண்டாம்;
**கிட்டியே** தலையீற்றா ஆம்,
கிருட்டி ஆம், தாளம் முப்பேர்;
**கட்டளை** நிறைகல், ஒப்பே,
இட்டிகை, யியற்றல், ஆணி.

57. நாட்டம் கண், ஓர் பண், வாள், ஆம்;
நாகு சாங்கு, இளமை, நத்தை;
ஒட்டம் மேலுதடே, தோல்வி;
உயிர் என்ப காற்றே, சீவன்;
கோட்டம் கோண், படப்பை, நாடு,
கோயில், அவ்வியம், ஆண்கொட்டில்;
தோட்டி அங்குசம், கபாடம்;
துணை என்பது அளவும், ஒப்பும்.

58. தடம் மலை, பெருமை, கோணல்,
சரி, கரை, அகலம், வாவி;
அடல் கொலை, வலி, போர் ஆகும்;
அருத்தமே பொருள், பொன், பாதி;
உடல் பொருள் ஆகம் என்ப;
ஓங்கல் வெற்பு, உயரம், மூங்கில்;
விடபமே இடபராசி,
விடை, மரக்கொம்பு முப்பேர்.

59. கடகமே சேனை, வட்டம்
கைவளை, மதில் நாற்பேரே;
வடகம் தோல், அத்தவாளம்,
வலம் என்பது இடமே, வெற்றி;
படுவி கள்விற்பான், குண்டம்
பரம் என்ப கவசம், மெய் ஆம்;
நொடி பிதிர், கிளவி , ஆகும்;
நூனம் நிச்சயமே, குன்றல்.

60. **கடம்** கயிறு, உவாக்கதுப்புக்,
கான், சுரம், உடம்பு, நீதி,
குடம், கடாம், ஈமம், யானைக்
குழாம், கடன், முழவு ஐந்துஎழ் ஆம்;
**மடங்கலே** அசனி, சீயம்,
மறவி, நோய், யுகம், ஊழித்தீ;
**படம்** கரிமுகபடாம், நற்றுகில்,
பாம்பின் பணம் முப்பேரே.

61. **ஆடலே** பெண்ணாண் கூடல்,
வார்த்தை, கூத்தாடல், வென்றி;
**பாடலம்** சிவப்பினோடு,
பாதிரி, குதிரை முப்பேர்;
**கோடரம்** குரங்கு, சோலை,
கொம்பொடு, குதிரை ஆகும்;
**ஆடவர்** புருட நாமம் –
ஆம், இளையவர்க்கும் பேரே.

62. **கடி**, மணம், விரைவு, கூர்மை,
காலம், பேய், விளக்கம், காப்பு
வடிவு, அச்சம், வாசம், ஐயம்,
வரைவு, விம்மிதம் ஏழ் ஆறுஆம்;
**வடுகே** இந்தள ராகப் பேர்
மருதயாழ்த் திறனும் ஆமே;
**வடவையே** குதிரைப்பெட்டை, உவாப்பிடி,
வடவைத்தீ ஆம்.

63. **கோடு** சங்கு, ஊதுகொம்பு,
மரக்கொம்பு, விலங்கின் கொம்பு,
நீடுமெய் வரம்பு, குன்றின்
முகடு, நீர்க்கரை ஏழ்பேர்ஆம்
**மோடு** மேடு, உதரம் ஆகும்;
**முறுவலே** நகைத்தல், பல்ஆம்;
**ஆடியே** ஓர் மாதம், கண் –
ணாடி, உத்தராடம் ஆமே.

64. **தட்டுத்** தேர், நடுவு, குற்றம்,
தட்டொடு, பரிசை, முட்டு ஆம்;
**செட்டி** வாணிகன், செவ்வேள் ஆம்;
செப்பு உரை, கரண்டகம் பேர்;
**மட்டு** என்பது எல்லை, கள் ஆம்;
மார்க்கமே சமயம், வீதி;
**பட்டிகை** என்ப கச்சுப்,
பகட்டுடன், இரதனம்ஆமே.

65. கடை முடிவு, இடம், வாயில் பேர்,
**களேவரம்** பிணம், உடம்பு ஆம்;
**உடை** துகில், செல்வம் என்ப;
உடுக்கை தண்ணுமை, துகிற்பேர்;
**அடை** இலை, கனமே, அப்பம்,
அடுத்தல், செல்வழி ஐம்பேர் ஆம்;
**நடை**வழி, ஒழுக்கம், செல்வம்;
**நார்** என்ப கயிறு, அன்பு ஆமே.

66. **விடை** எதிர்மொழியும், ஏறும்,
விடுத்தலும் விளம்பும் முப்பேர்;
**கிடை** கடை, உவமை, நெட்டி;
கீதமே இசையும், வண்டும்;
**படி** அங்கவடி, சோபானம்,
பகை, குணம், உவமை, பார் ஆம்;
**குடி** குலம், புருவம், ஊர் ஆம்;
**கொடி** வல்லி, துவசம், காக்கை.

67. **நட்டமே** நடனம், கேடு ஆம்;
**நகர்** என்ப மனையும், ஊரும்,
**தொட்டல்** என்பதுவே உண்டல்,
தோண்டல், கைதீண்டல் முப்பேர்;
**தட்டலே** தடை, கிட்டல் பேர்;
**தை** ஒரு மாதம், பூசம்;
**கட்டல்** என்பது தடுத்தல்,
களைதல், பந்தித்தல், கள்ளல்.

68. **புட்கரம்** நிறைவு, பாண்ட
முகம், தீர்த்தம், புனல், வான், சேனம்,
கட்கம், பங்கயமே, யானைக்
கைந்நுனி, குருகு ஈரைந்து ஆம்;
**வெட்சி** என்பதுபோல செச்சை,
மிகுநிரை கவர்தல் என்ப;
**பெட்பு** யென்ப பெருமை, அன்பு ஆம்;
**பிரசம்** தேன், மது, வண்டு ஆமே.

69. **அடுதலே** அட்டல் என்ப,

அடர்தலும், கொலையும் முப்பேர்;

**சடிலமே** நெருங்கலோடு,

சடை, குதிரையும் முப்பேரே;

**படலையே** படர்தல், மாலை,

பதலையே, வாசிக்கோவை;

**கிடுகு** தேர் மரச்சுற்றின் பேர்,

பரிசைக்கும் கிளத்த லாமே.

70. **படலிகை** பீர்க்கு, வட்டம்,

பரந்த கைம்மணி, பூந்தட்டு ஆம்;

**கொடியனே** கொடியன், கேது ஆம்;

குண்டு ஆழம், தாழ்வு, ஆண்மாவே;

**தொடு** என்ப மருதப்பூமி,

தோட்டம், கைதவம் முப்பேரே;

**முடி** மயிர், முடியே, சென்னி,

மகுடமும் மொழியலாமே.

71. **ஆடகம்** துவரை, பொன்ஆம்;

**அஞர்** அறிவிலரே, துக்கம்;

**கோடகம்** முடியுறுப்பும்,

குதிரையும், புதுமையும் பேர்;

**பீடிகை** ஆவணம், பூந்

தட்டோடு, பீடம் முப்பேர்;

**தோடு** பூவிதழே, பெண்ணை,

மடல் போல்வ தொகுதிக்கும் பேர்.

72. **அடர்** என்ப நெருங்குதல் பேர்
ஐம்மையின் வடிவும் ஆகும்;
**விடர்** முனியிருப்பு, தூர்த்தர்,
கமர், வெற்பின் முழை, காடு ஐம்பேர்;
**விடலை**யே தலைவன் பேரும்
விறலோன்தன் பேரும் ஆகும்;
**ஆடி**செண்டு வெளி, தாள், ஆதி,
கவிதையின் பாதம் ஆமே.

**ணகர எதுகை**

73. **புணர்வு** தோய்ந்திடல், இசைப்பு, ஆம்;
**பொழில்** புவி, பெருமை, சோலை;
**உணர்வு** என்ப தெளிவே, ஊடல்
ஒழிதலே, அறிவும் ஆகும்;
**குணம்** என்ப கயிறு, பண்பு,
கும்பம், லில்நாணி நாற்பேர்;
**கணம்** உடு, நோய், திரட்சி,
காலநுட்பம், பேய் வட்டம்.

74. **ஆணமே** குழம்போடு, அன்பு ஆம்;
அலம் நாஞ்சில், அமையுமென்றல்;
**ஓணம்** மாயோன் நாள், ஆறு ஆம்;
**ஊதியம்** இலாபம், கல்வி;
**கணமே** பரிநுண், செக்கு, ஓர்
கரணம், பொற்காசு நாற்பேர்;
**கோணலே** மாறுபாடும்,
கூறும் ஆம், வளைவும் ஆமே.

75. **குணில்** குறுந்தாடி, கடிப்பு ஆம்;
குல்லையே துளவு, வெட்சி;
**மணி** நவமணியே, கண்டை,
வளப்பொடு, ஞமை, நன்மை;
**துணி** சோதிநாளே, துண்டம்;
**துளி** மழைத்துளி, பெண்ணாமை;
**பிணிமுகம்** மயில், புள் பேர் ஆம்;
**பிசிதம்** நீர், இறைச்சி, வேம்பு.

76. **நாண்** இலச்சைப் பேர்தானே,
கயிறு என்றும் நாட்டல் ஆகும்;
**தோணியே** கடைநாள், வங்கம்,
தொடுகணை, தெப்பம், சேறு;
**வாணியே** ஓர் கூத்தின் பேர்;
வாக்கு, நாமகளும் ஆமே;
**ஏணியே** உலகோடு, எல்லை,
இறைவ, மான் என்றும் சொல்லும்.

77. **திணை** நிலம், குலம், ஒழுக்கம்;
**செவி** என்ப காது, கேள்வி;
**பிணை** ஆசை, விலங்கின் பெண்பேர்,
**பிலவங்கம்**, குரங்கு, தேரை;
**கணை** அம்பு, திரட்சியும் பேர்;
**கட்சி**யே காடும், கூடும்;
**பணை** வயல், பரியின் பந்தி,
பருத்தல், வேண், அரசு, பீடு ஆம்.

78. **யாணரே** புதுமை, தச்சர்,
எய்திய வனப்பு, நன்மை;
**பாணம்**தான் மேகவண்ணக்
குறிஞ்சி, எண்களை, பூம்பட்டு ஆம்;
**சேண்** என்பது அகலம், நீளம்,
செப்பிடில் உயரம் முப்பேர்;
**ஆணை** மெய்யுடனே, வென்றி,
**சூள்**, ஏவல் ஆக நாற்பேர்.

79. **அண்டம்** ஆகாயம், முட்டை;
**அயில்** எனல் வேலே, கூர்மை;
**துண்டமே** சாரைப் பாம்பு;
துணியொடு, வதனம், மூக்கு ஆம்;
**கண்டமே** கவசம், வெல்லம்,
கழுத்து, இடுதிலை, வாள், துண்டம்;
**முண்டகம்** தாழை, கள்ளு,
முளரி, மத்தகம், முள்மூலம்.

80. **ஆண்டரே** பகைவர், வானோர்,
ஆயர் என்று ஆகும் முப்பேர்;
**சுண்டனே** சதய நாளும்,
சூறனும் வேறு காட்டும்;
**கண்டல்** கேதகை, முள்ளிப்பேர்;
**கரைதலே** விளித்தல், ஓசை;
**பண்டம்** பொன், பணிகாரப் பேர்;
**பாகு** பால், குழம்பு, பாக்கு ஆம்.

81. **விண்டு** என்ப மாயோன், வெற்பு,
மேகமே, மூங்கில், காற்று ஆம்;
**தொண்டு** என்ப கழமை, ஒன்பான்,
தொழும்பொடு, வழிபாடு ஆமே;
**தண்டு** என்ப குழாயே, வீணை,
தடி, படை, மிதுனம், ஒந்தி;
**வண்டு** என்ப சங்கு, குற்றம்,
வளை, அளி, வாளி, ஐம்பேர்.

82. **உண்டையே** திரளை ஆகும்,
உறுபடை வகுப்பும் என்ப;
**தொண்டை** ஆதொண்டை, கொவ்வை,
தங்கும் யானைத் துதிக்கை;
**கொண்டையே** மயிர்முடிக்கும்,
இலந்தையின் கனிக்கும் கூற்று ஆம்;
**கண்டிகை** பதக்கம், வாகு –
வலயமே, கலன்பெய் செப்பு.

83. **தண்ணம்** ஓர் கட்பறைப் பேர்,
தறித்திடு மழுவும் ஆகும்;
**வண்ணம்** ஏர், சந்தம், பண்பு ஆம்;
**மறை** இராசியமே, வேதம்;
**பண்** என்ப பாட்டும், பண்ணும்,
பரிமாவின் கலணையும் பேர்;
**மண்** அணு, ஒப்பனைப் பேர்,
முழவின் மார்ச்சனையும் ஆமே.

84. **அணங்கு** நோய், அழகு, தெய்வம்,
ஆசை, பெண், கொலை, வருத்தம்;
**துணங்கையே** விழாப், பேய், கூத்து ஆம்,
ஆதிரை நாளும் சொல்லும்;
**குணுங்கர்** தோற்கருவி மாக்கள்,
குயிலுவர், இழிஞர் முப்பேர்;
**துணங்கறல்** இருள், விழா ஆம்;
**தோன்றலே** சுதன், நாதன் பேர்.

85. **புணரியே** வாரி, நீரில்
பொருதிரை, கரை முப்பேர் ஆம்;
**பணிலமே** சலஞ்சலம், சங்கு
இருபெயர் பகரலாமே;
**கணி** வேங்கை மரமது அகும்,
கழனி சூழ் மருதமும் பேர்;
**பணியே** தோற்கருவி, வார்த்தை,
பாம்பு, செய்தொழிலும் ஆமே.

86. **பாணி** ஊர், நீர், கை, ஓசை,
பற்றுக், கான், போது, நாடு,
சேணுறு சோலை, பண்டம்,
சிறந்த பல்லியம் பன்னொன்று ஆம்;
**தாணுவே** சைலம், குற்றி,
சங்கரன், நிலை, துணை ஐம்பேர்;
**வேணியே** சடை, விசும்பு ஆம்;
**வியாளமே** புலியும், பாம்பும்.

87. **குண்டலம்** குழை, விசும்பு, ஆம்;
**குபேரனே** தனதன், சோமன்;
**மண்டலம்** பரி, ஊர், வட்டம்;
**மந்தி**யே யூகம், வண்டு;
**கொண்டலே** முகில், கீழ்காற்று ஆம்;
**கோட்டியே** வாயில், கோட்டம்;
**மண்டலி** பூனை, பாம்பு;
மண்ணொடு, நாயும் ஆமே.

88. **புண்டரீகம்** திக்கானை,
புலி, வண்டு, கழுகு, கஞ்சம்;
**தண்ட**மே யானை செல்லம்
வழி தண்டாயுதம், குடைக்கால்;
**பிண்டி** நென்மா, அசோகு ஆம்;
**பிதா ச்** சிவன், கிரமன், நாரை;
**கண்டகம்** சரிகை, முள், வாள்;
களவு என்ப களாச், சோரைப்பேர்.

89. **பண்ணவன்** முனிவன், தேவன்,
பகர்குரு, அருகன் நாற்பேர்;
**தண்ணடை** மருதம் சார் ஊர்,
நாடு என இருபேர் சாற்றும்;
**வண்மை**யே வழங்கல், வாய்மை,
வளம், புகழ், வலி ஆம் என்ப;
**ஒண்மை**யே மிகுதி நன்மை,
ஒழுங்கு, அறிவு, அழகு ஐம்பேரே.

90. **எண்** வலி, எண், இலக்கம்,
எளிமை, சோதிடம், விசாரம்,
**கண்** இடம், கணு, வேய்கண் ஆம்;
**காஞ்சி** மேகலை, ஓர் பண் ஆம்;
**விண்** முகில், சுவர்க்கம், வான் ஆம்;
**விபுலம்** பார், விரிவு, பீடு;
**பண்ணை**யே வயல், நீர்த்தாழ்வு,
மருதம், மாத்துயிலும் பாழி.

91. **காண்ட**மே ரிரை, காடு, அம்பு
கமண்டலம், கலன் பெய் செப்பி,
நீண்ட கோல், முடிவு தூசு,
நீர், படைக்கலம் ஈரைந்து ஆம்;
**பாண்டி**ல் ஏறு, ஊர்தி, வட்டம்,
பணை, கட்டில், விளக்குத் தானம்,
**ஈண்டு** என்பது இவ்விடத்தோடு,
இப்படி, சடிதியும் பேர்.

92. **அண்டசம்** முதலை, ஓந்தி,
அரணை, புள், உடும்பு, பல்லி,
**நண்டு**, மீன், தவளை, யாமை,
நாகம், இம்பியும் ஈராறு ஆம்;
**சண்டன்** கூற்று, அலி, வெய்யோன் ஆம்;
**தாள்** கதவுறு தாள், பாதம்;
சுண்டையே சுண்டை, கள் ஆம்;
**சொர்க்கமே** சுவர்க்கம், கொங்கை.

93. **பணம்** என்பது அரவின் பையும்,
பாம்பும், பொற்காசும் முப்பேர்;
**மணம்** என்ப வாசம், கூட்டம்,
வதுவையும் ஆகும் என்ப;
**பணவை**யே பரணும் பேயும்,
பையுளே சிறுடை, நோய் ஆம்;
**நுணவை** எண்ணோலை, பிண்டி;
**நுனி** என்ப நுதி, நுண்மைப்பேர்.

## தகர எதுகை

94. **மதலை**யே கொன்றை, பிள்ளை,
மரக்கலம், கொடுங்கை, தூண் ஆம்;
**சிதலை** நோய், துணி, செல் லென்ப;
**சீதம்** நீர், குளிரே, மேகம்;
**பதலை** ஓர்கட்பறைப் பேர்,
பருவரை தாழிக்கும் பேர்,
**கதலி**யே வாழை, தேற்றுக்,
காற்றாடி, துவசம் நாற்பேர்.

95. **இதழ்** பணையேடு, பூவின்
இதழ், உதடு என இம் முப்பேர்;
**கதழ்வு** வேகம், சிறப்பு ஆம்;
களி செருக்கொடு, குழம்பு;
**மதுக**மே இருப்பை, எட்டி,
மதுரம் ஆம், தராவும் ஆமே;
**சிதடன்** அந்தகன், மூடன் பேர்;
**திதி** பக்கம், நிலைபெறும் பேர்.

96. **ஆதன்** ஆருயிர், ஓர்வில்லான்;
**அங்கி** என்பது தீச், சட்டை;
**போதகம்** யானைக் கன்று,
போற்றிய இளமைக்கும் பேர்;
**ஏதம்** துன்பம், குற்றப்பேர்;
**ஈமமே** மயானம், காட்டம்;
**சூதன்** தேர்ப்பாகன், சூதன்;
**சுவதமே** வெயர்வு, வெண்மை.

97. **சூதம்** மாமரமே, வண்டு,
சூதுடன், இரதம், தோன்றல்;
**சூதகமே** ஆசௌசம்,
தோனைமார் தோயாப்பூப்பு ஆம்;
**பூதம்** ஆல், இறந்தகாலம்,
புனிதம், ஐம்பூதம், சிவன்;
**மாதவம்** தவம், வசந்தம்;
வாதமே தருக்கம், காற்று ஆம்.

98. **மதன்** வலி, வேள், வனப்பு ஆம்;
**வலித்த** லே வளைத்தல், மேசல்;
**பதங்கம்** புட்பொது, விட்டில் பேர்;
**பலி** பூசை, பிச்சை, நீறு ஆம்;
**சிதம்** விண்மீன், ஞானம், வெள்ளை,
செயமுறப்பட்டதாமே;
**நிதம்பமே** அல்குல் என்ப;
நெடுமலைப்பக்கமும் பேர்.

99. **சதி** உரோகிணி, கற்பாட்டி,
வஞ்சனை, தாளவொத்து;
**விதி** என்பன வினை, அயன்பேர்;
**வேட்டுவன்** மகநாள், வேடன்;
**பதி** இறை, கேள்வன் ஊர் ஆம்;
**பதுக்கை**யே பாறை, தூறு;
**பிதல்** கதை, நொடி, தூவல் பேர்;
**பிண்ட**மே திரளை, பிச்சை.

100. **ஆதி**யே முதல், நேரோடல்,
அருகன், மால், ஈசன், வேதன்;
**பூதியம்** புளி, உடல் பேர்;
**பொம்மலே** பொலிவும், சோறும்;
**பாதிரி** பாடலர்பேர்,
பணைத்து எழு மூங்கிற்கும் பேர்;
**ஏதி** ஆயுதம், வாள் என்ப;
**இழை** நூல், ஆபரணம் ஆமே.

101. **சாதி**யே பிரம்பு, கள், ஓர்
தரு, சிறுகண்பகப் பேர்;
**போதம்** ஞானம், **தோணி**ப் பேர்;
**புகல்** குதிர், உடல், சொல், வெற்றி;
**ஓதி** பெண்மயிலே, பூனை,
ஓந்தி, மெய்ஞ்ஞானம், வெற்பு ஆம்;
**ஓதிமம்** அன்னம், வெற்பு ஆம்;
**உருத்தலே** தோற்றல், கோபம்.

102. **சுதை** மகள், கறவாத்தேனு
கண்ணச் சாந்து, அமுது நாற்பேர்;
**புதை** என்ப கணையின் கட்டும்,
புதுமையும், மறையும் முப்பேர்;
**மது** என்ப நறவும், தேனும்,
வசந்த காலமும் ஆம் என்ப;
**கதை** தண்டாயுதமே, வார்த்தை,
காரணம் இம்முப்பேரே.

103. **சீதை**யே பொன்னாங்காணி,
படைச்சால், சீராமன் தேவி;
**மேதை** தோல், புதன், இறைச்சி,
மிக்க பேரறிவு, கள் ஆம்;
**கோதை** முன்கைத்தோற்கட்டு,
குழல், தார், காற்று, ஒழுங்கு, சேரன்;
**ஓதை** பேரொலி, மதில்பேர்;
உக்கம் தீ, இடை, ஆனேறு.

104. **ஆத்தம்**பொன், பாதி, கை, கண்
ணாடி, சொற்பொருள், காடு, ஓர்நாள்;
**புத்தகம்** கோசம் என்ப,
சித்திரப்படாமும் ஆமே;
**நத்தமே** இருளும், ஊரும்,
நந்துடன், இரவு நாற்பேர்;
**துத்தம்** ஓர்இசை, நாய், பாலே,
வயிறு, கண்மருந்தும் சொல்லும்.

105. **அத்து** என்ப அரைஞாண், செம்மை,
அசைச்சொலோடு, இசைப்பு நாற்பேர்;
**தொத்துப்** பூங்கொத்துத் தொண்டுஆம்:
**தூம்புவேண்**, துளை, மரக்கால்;
**தத்தை** மூத்தாள், கிளிக்கு ஆம்;
தழல் கிளிகடிகோல், செந்தீ;
**உத்தரம்** ஊழித்தீ, மே
லொடு, மறுமொழி, வடக்குஆம்.

106. **கூத்தனே** உயிர், நடன் பேர்;
**குலம்** குடி, கோயில், கூட்டம்,
**ஊழ்த்தலே** நினைத்தல், செவ்வி,
உறு பதனழிவும் முப்பேர்;
**பாத்து** என்ப கஞ்சி, சோறு,
பகுத்திடல் வகுத்த முப்பேர்;
**தீர்த்தமே** விழாவும், நீரும்;
**தீர்த்தனே** அருகன், ஆசான்.

107. **குத்தி** மண், அடக்கம் என்ப;
**கோணம்** வாள், குதிரை, மூக்கு ஆம்;
**பத்தியே** முறை, ஒழுக்கம்,
பகர் வழிபாடும் முப்பேர்;
**அத்தி** ஆர்கலியே, யானை,
அதவு, எலும்பு ஆகநாற்பேர்;
**சத்தியம்** சபதம், மெய் ஆம்;
தபுதலே சாவும், கேடும்.

108. **பித்திகை** கருமுகைக்குப்
பெயர், குவர்த்தலமும் ஆகும்;
**கத்திகை** தொடை விகற்பம்;
துவசமே, சமழ் வாசந்தி;
**உத்தி** செந்திருவுறுப்புச்,
சுணங்கு, உரையாடல் முப்பேர்;
**துத்தியே** சுணங்கு, பாம்பின்
சுடர்பொறி, புதல் ஒன்று ஆமே.

109. **சித்திரபானு** செந்தீ,
திவாகரன், ஆண்டு ஒன்றின்பேர்;
**பத்திரம்** இலை, வனப்புப்,
படை, நன்மை, சிறகே, பாணம்;
**சித்திரம்** அழகு, ஓர் பாடல்;
சிறந்த விம்மிதம், ஏரண்டம்;
**சத்திரம்** குடையே, அன்ன
சாலை, கைவிடாவேல்; வேள்வி.

110. **காத்திரம்** கனம், மெய், சீற்றம்,
களிற்றின் முன்காலே, கீரி;
**நேத்திரம்** கண், பட்டாடை;
நீலியே கருமை, துர்க்கை;
**தோத்திரம்** புடவி தானே,
குலமொடு, மலையும் ஆமே;
**பாத்தியே** சிறுசெய், இல்லம்,
பகுத்தலும் வகுத்த நாமம்.

111. **சதம்** இலை, இறகு, நூறு,
**சத்தமே** ஓசை, ஏழ் ஆம்;
**கதவமே** கதவு, காப்பு ஆம்;
கழங்கு பேண்நடம், கழற்சி;
**பதம்** மூரல், இன்பம், செவ்வி,
பதவி, தாள், வரிசை, வார்த்தை;
**மதி** ஓர் முன்னிலையசைச்சொல்;
மாதம், அம்புலி, புத்திப் பேர்.

112. **பீதகம்** சாந்து, பொன்மை,
பெருந்தனம், இருவேலிப் பேர்;
**சாதகம்** வானம்பாடி,
சனனம், பாரிடம் முப்பேரே;
**சேதகம்** சேறு, செம்மை,
**தேயம்** தான் உடம்புநாடு ஆம்;
**மாதர்** ஓர் இடைச்சொல், காதல்,
வனப்பொடு, மகளிர் ஆமே.

113. **சோதி** மால், அருகன், பானு,
சுடர், விளக்க, ஈசன், ஓர்நாள்;
**பூதியே** நரகம், செல்வம்,
துர்க்கந்தம், புழுதி, நீறுஆம்;
**வீதியே** தெரு, நேரோடல்;
மேல் என்பது இடம், விண், மேற்குஆம்;
**மாதிரம்** திசை, ஆகாயம்,
மலை, யானை, நிலம் ஐம்பேரே.

114. **தாது**பொன்முதலாம் ஏழும்,
சடம் உறு தாது ஓர் எழும்;
**பூதம்** ஓர் ஐந்தும், காவிக்
கல்லுடன் புகலும் நாற்பேர்;
**வேதிகை** பலகை, திண்ணை;
**வெதிர்** என்ப செவிடு, வேணு;
**கேதுவே** சிகி, பதாகை;
**கிள்ளை** தான் குதிரை; தத்தை.

115. **கதுப்பே** ஆண்மயிரும், பெண்பால்
மயிரொடு, கவுளும் முப்பேர்;
**விதப்பே** கம்பிதம், மிக்கு ஆகும்;
வித்தம் பொன், பழிப்பு, ஞானம்;
**ஆதிர்ப்பு** ஒலி, நடுக்கம் என்ப;
அகப்பாவே புரிசை, மேடை;
**ஒதுக்கமே** நடை, மறைப்பு ஆம்;
**ஒருத்தல்** ஆண்விலங்கு, வேழம்.

116. **பத்திரி** பறவை, காளி,
பரி, இலை, பாணம் ஐம்பேர்;
**அத்தரி** கழுதை, விண், ஒட்
டகம், அசலம், அம்பு ஆம்;
**சத்தியே** உடை, வேல், கான்றல்,
குடை, வலி, துவசம் தான் ஆம்;
**சுத்தியே** அகல், வெண்சங்கம்,
சுத்தம், ஓர் கருவிக்கும் பேர்.

117. **புத்தன்** மால் அருகன், சாத்தன்;
**பூழில்** தான் அகில், பூமிப்பேர்;
**புத்தனே** புதுமை, தே ஆம்;
**பூட்கை** தோல், மேற்கோள், யாளி;
**தைத்தல்** துன்னம், கைத்தல் பேர்;
**சாறு** கள், விழவு, தாறு ஆம்;
**முத்த**மே பிரியம், ஒட்டம்,
மருத நன்னிலம், முத்து ஆமே.

118. **அத்தனே** மூத்தோன், தந்தை,
அரனொடு, குருவும் நாற்பேர்;
**சித்தமே** திடம், உள்ளப்பேர்;
**சேகரம்** தலை, மா, ஏர் ஆம்;
**கைத்த**லே சினம், கைப்பு ஆகும்;
**கஞறலே** பொலிவு, கன்றல்;
**சித்து** என்ப சயமே, ஞானம்;
செய் என்ப நிலம், ஏவல் பேர்.

119. **உத்திரம்** சித்திரம் சேர்ந்து
ஒளிரம் இல்லுறுப்போடு, ஓர்நாள்;
**பைத்த**லே முனிவி னோடு,
பசுத்தலும், பகரல் ஆகும்;
**மத்திகை**யே சம்மட்டி,
சுடர்நிலைத்தண்டு, மாலை;
**மத்து** என்ப தயிர்மத்தோடு,
மத்தமும் இருபேர் ஆமே.

120. **மதர்வு** மேவுதல், வனப்பு,
வலி, இடம், மிகுதி, ஐம்பேர்;
**புதவு** என்ப கதவு, ஓர்புல் ஆம்;
**புணர்ச்சி**யே கலவி கூடல்;
**சிதர்** உறி, திவலை, வண்டு,
சீலையின் நுனி நாற்பேரே;
**அதர்** வழி, புழுதி, ஆட்டின்
அதரும், நுண்மணலும் ஆமே.

121. **முதலை** செங்கிடை, இடங்கர்,
முருந்து என மொழியல் ஆகும்;
**ஆதம்** இறங்குதல், பாதாளம்,
கீழும் என்று அறையும் முப்பேர்;
**கதி** நடை, விரைவே, நான்கு
கதியொடு, கதியும் காட்டும்;
**மதம்** இபமதம், செருக்கு ஆம்;
**மாயையே** மாயம், சத்தி.

122. **பீதமே** சாந்து, மஞ்சள்
பிங்கலத்தொடு, பொன்மைப் பேர்;
**பேதை** ஓர் பருவம், மூடன்,
பெண், தரித்திரனே நாற்பேர்;
**வாதுவர்** யானைப் பாகர்,
வயப்பரிமா வடிப்போர்;
**மூதிரை** ஆதிரைப் பேர்;
முக்கணன் பேரும் ஆமே.

123. தாதியே பரணி நாளும்,
அடிமையும் இருபேர் காற்றும்;
**போதுதான்** காலம், பூ ஆம்;
**போர்வை** தோல், கவசம், மீக்கோள்;
**சாதமே** திடம், பதப்பேர்;
**தகைமை** ஏர், இயல்பு, பீடு ஆம்;
வீதலே கெடுதல், சாவே;
இலம்பாடும் விளம்பும் முப்பேர்.

**நகர எதுகை**

124. **இந்தனம்** மிசையே, காட்டம்,
எரியிடு கனலும் ஆகும்;
**சந்தமே** நிறம், வனப்புச்,
சாற்றிய கவிதை, சாந்தம்;
**கந்தம்** இந்தியம், பகுத்தல்,
கழுத்தடி, கிழங்கு, நாற்றம்;
**மந்திரம்** விகாரம், கோயில்,
வாசியின் குழாம், வீடே, கள்.

125. அந்தில் ஆங்கு அசை, இடப்பேர்;
**அணவலே** அணுகல், புல்லல்;
சந்தியே அந்தி, மூங்கில்,
சதுக்கமும், இசைப்பும் அப்பேர்;
நந்தியே சிவனும், ஏறும்,
நந்தியீச் சுரனும் முப்பேர்;
**உந்தி** தேருருளே, யாறே,
உவரி, நீர்ச்சுழியே, கொப்பூழ்.

126. **கந்து** பண்டியுள் இரும்பும்,
கம்பமும், யாக்கை மூட்டும்;
**கந்துகம்** குதிரை, பந்து ஆம்;
**கனம்** என்ப புயல், பாரப்பேர்;
**பந்து** கந்துகமும், மட்டுப்
படநீர் தூம் துருத்தியும் பேர்;
**குந்தளம்** மாதர் ஓதி,
குழற்கொத்துக், குருளை முப்பேர்.

127. **வேந்தனே** அரசன், திங்கள்,
வியாழன், இந்திரன், ஆதித்தன்;
**காந்தாரம்** இசை, காடு என்ப;
**காழகம்** கருமை, தூசு ஆம்;
**ஏந்தலே** பெருடை, மேடு ஆம்;
**எஃகு** உருக்கொடு, வேல், கூர்மை;
**கூந்தல்** பெண்மயிர், பீலிப்பேர்;
**குவலயம்** குவளை, பூமி.

128. **ஆந்தரம்** முடிவு, பேதம்,
அண்டமோடு, இடை நாற்பேரே;
**கந்தரம்** என்ப மேகம்,
கழுத்தொடு, மலைமுழைப்பேர்,
**மந்தாரம்** தருமரம், செவ்
வரத்தமும் ஆகும் என்ப;
**சிந்துரம்** புளியே, யானை,
செங்குடை, திலகம், செம்மை.

129. **கந்தருவம்** பண், வாசி;
**கவந்தம்** என்பது நீர், மட்டை;
**குந்தமே** ஒரு வியாதி;
குருந்தொடு, குதிரை, கைவேல்;
**செந்து** ஓர் நரகம், ஓரி,
சீவனோடு, அணுவும் நாற்பேர்;
**சிந்து** நீர், மூச்சீர், ஆறு,
கடல், குறள், ஒருதேசப்பேர்.

130. **அந்தி** முச்சந்தி, பாலை,
யாழிசை, இரவு, மாலை;
**நந்து** என்ப நத்தை, சங்கு ஆம்;
**நாறுதல்** மணம், உண்டாதல்;
**மைந்தனே** திறலோன், சேய் ஆம்;
**வசந்தமே** வேனில், வாசம்
**வந்தியர்** புகழ்வோர் பேரும்,
மலடிகள் பேரும் ஆமே.

131. **விந்தம்** ஓர் எண்ணும், வெற்பும்;
**விருத்தமே** வட்டம், மூப்பு, ஆம்;
**அந்தணர்** அறவோர், பார்ப்போர்;
**அணி** படைவகுப்பு, அணிப்பேர்;
**அந்தகன்** குருடன், கூற்று அம்;
**அங்காரகன்** தீச் செவ்வாய்;
**மந்தனே** சனி, கூர்ப்பு இல்லா
மனுடனும் இருபேர் ஆமே.

**பகர எதுகை**

132. **உப்பு** மெல்லியவர் ஆடல்,
உவர், கடல், இளிடை நாற்பேர்;
**செப்பமே** நடுநிலைப்பேர்,
தெருவொடு, நெஞ்சும் ஆகும்;
**துப்பு** அரக்கு, ஊற்றம், தூய்மை,
துகிர், பகை, அனுபவப் பேர்;
**கப்பணம்** இரும்பிற் செய்த
நெருசில்முள், கைவேல் ஆமே.

133. **தாபரம்** மலைபோல் நிற்றல்,
சடமொடு, தருவும் மூப்பேர்;
**நீபம்** உத்தரட்டாதிப் பேர்,
நிமித்தம், நீர்க்கடம்பும் ஆகும்;
**யூபமே** கவந்தம், வேள்விக்கு
உறுதம்பம், படைவகுப்பு ஆம்;
**சாபமே** சபித்தல், வில் ஆம்;
தளிமமே அழகு, மெத்தை.

134. **சீப்பு** என்ப கதவின் தாழும்,
சீவு சங்கமும் ஆம் என்ப;
**நாப்பண்** என்பது தேர்த்தட்டு,
நடுவும், யாழுறுப்பும் முப்பேர்;
**காப்பு** என்ப காவலோடு,
கதவும், வெண்ணீறும் ஆகும்;
**யாப்பு** என்ப கவிதை, கட்டு ஆம்;
**இறால்** தேன்கூடு, எருது, மீனே.

**மகர எதுகை**

135. **சமன்** யமன், நடுவும் ஆகும்;
**சலம்** என்ப வயிரம், நீர், பொய்;
**கமலம்**, நீர் வனசமும் பேர்;
**கலாம்** சினம், கொடுமை ஆகும்;
**குமரி** காற்றாழை, கன்னி,
கொற்றவை, காளிக்கும் பேர்;
**ஞமலி** நாய், மயில், கள் என்ப;
**நாளை** கள்ளும், மலர்மொட்டும்பேர்.

136. **சாமம்** ஓர் வேதம், பச்சை,
சாமமே, கருமை நாற்பேர்;
**வாமமே** குறள், இடப்பால்,
வனப்பொடு, தொடையும் ஆமே;
பூமலர் வனப்புக் கூர்மை,
பொலிவொடு, பிறப்புப் பூமி;
**ஏமமே** சேமம், காவல்,
இன்பம், பொன், இரவே, மையல்.

137. **உம்பரே** தேவர் ஆகும்,
உயர்நிலமுடன் மேலும் பேர்;
**வம்பு** என்ப புதுமை, கச்சு,
மணம், நிலையின்மை நாற்பேர்;
**கும்பமே** குடம், இராசி,
கும்பி மத்தகமும் ஆகும்;
**தும்பு** என்ப 'சிம்பு, தோடு ஆம்;
**சுகம்** என்ப கிளியே, இன்பம்.

138. **ஆம்பல்** வேண், கள்ளுக் கவ்வை;
அல்லி, வங்கியமே, யானை;
**தாம்பல்** கம்புதல், பழம்பூ;
**தமிழ்** என்பது இளிடை, நீர்மை;
**தாம்பு** என்ப கயிறுதானே,
தாமணி தனக்குர் பேர் ஆம்;
**காம்பு** வேண், மலர்த்தாள் பட்டே;
கடி மலர்க் கொம்பே நாற்பேர்.

139. **அம்மையே** வருபிறப்பும்,
அழகும் ஆம், தாயும் ஆகும்;
**சும்மை** என்பதுவே நெற்போர்;
நாடு, ஒலி, சுமையும் சொல்லும்;
**செம்மை** செவ்வையும், சிவப்பும்;
**திரிதலே** உலாவல், கேடு ஆம்;
**கொம்மையே** இளமை, வட்டம்,
கொங்கை, கைகுவித்துக் கொட்டல்.

140. **அம்** அழகு, அசைச் சொல், நீர் ஆம்;
அழனம் தீ, பிணமும் ஆகும்;
**கம்** என்ப தலை, ஆகாயம்,
கனம், கால், நீர், விதி, வெளுப்பு;
**செம்மலே** பழம்பூ, ஈசன்,
சினேந்திரன், இறந்தோன், மைந்தன்;
**கம்மியர்** கைவினைப் பேர்,
கண்ணாளர் தாமும் ஆமே.

141. **வாமனம்** குறள், புராணம்,
மாதிரக் கயத்தில் ஒன்று ஆம்;
**காமரம்** அத்த நாளோடு,
அடுப்பு, இசைப் பொதுவும் காட்டும்;
**நேமி** சக்கரம், பார், வட்டம்,
நேமிப்புள், கடல் ஐம்பேரே;
**தேம்** என்பது இடம், தித்திப்புத்,
தேன், நாற்றம், திசை, தேசப் பேர்.

142. **தாமம்** வெற்பு, ஒழுங்கு, கொன்றை,
சாந்து, ஒளி, நகரம், தாம்பு;
பூமணிக்கோவை, மாலை,
பொருகளம், கரி, ஈராறு ஆம்;
**சோமன்** ஓர் வள்ளல், இந்து;
சுரும்பு என்ப மலையும், வண்டும்;
**சாமியே** முதல்வன், செவ்வேள்,
தலைவி, ஆசான், வெறுக்கை.

143. **குமுதமே** அடுப்பு, ஓர் திக்கின்
குஞ்சரம், ஒலி, வெண்ணெய்தல்;
**சிமயமே** மலை, வெற்பு, உச்சி
**தீத்** தீயே, நரகு, தீங்கு ஆம்;
அமறலே பொலிவு, துன்னல்;
அரில் தூறு, பிணக்கம், மாசு;
சிமிலியே குடுமி, சிக்கம்,
சிள்வீடுதானும் ஆமே.

144. **சம்புவே** இரவி, நாவல்,
சங்கரன், அயன், மால், ஓரி;
**தும்பியே** களிறு, வண்டு ஆம்;
**துன்னலே** செறிதல், சேர்தல்;
**கம்புளே** சங்கு, சம்பங்
கோழி என்று இருபேர் காட்டும்;
**அம்பரம்** கடல் , விண், தூசு ஆம்;
அண்ணலே தலைவன், பீடு.

145. **கிம்புரி** முடி, தந்தப்பூண்;
கேட்டைதான் முகடி, ஓர்நாள்;
**கும்பி** சேறு, ஆனை, பூதி;
**குலைதான்** செய்கரை, காய்க்கொத்து ஆம்;
**உம்பல்** ஆண்விலங்கு, வேழம்,
உயர்குலம், எழுச்சிக்கும் பேர்;
**அம்பலே** பழிச்சொல், இல்லோர்
அறிந்து அலர்தூற்றல் ஆமே.

146. **கம்பலை** அச்சம், ஓசை;
கம்பிதம், துன்பம் நாற்பேர்;
**செம்புலம்** பாலை சேரும்
திணை, செருக்களம் இரண்டும் ஆம்;
**தம்பமே** கவசம், தூண் ஆம்;
சமழ்த்தலே வருத்தம், நாணம்;
**கம்பமே** நடுக்கம், தம்பம்;
**கந்தனே** அருகன், செவ்வேள்.

147. **அமரரே** விபுதர், தெவ்வர்;
**அவந்தி** தான் கிளி, ஓர்ஊர் ஆம்;
**அமுது** பால், தேவருண்டி;
ஆகும் இன்சுவையும் முப்பேர்;
**அமலையே** ஆரவாரம்,
அயினியோடு, உமையும் முப்பேர்;
**தமம்** இருள், இராகுவின் பேர்;
**சார்ங்கம்** விற்பொது, மால்வில் ஆம்.

148. **அம்பிரம்** புளிமா, தேமா
ஆம் புளிப்பினுக்கும் அப்பேர்;
**சாம்பு** பொன், பறை ஆம் என்ப;
**தாண்டவம்** கூத்தே, தாவல்;
**பாம்பு** என்ப கரை, மராளம்;
**பை** அராப்படமே, பச்சை;
**ஆம்பியே** ஒலி, காளான் ஆம்;
**அயிராணி** உமை, இந்திராணி.

149. **காமனே** வாசவன், வேள்,
கழுதும், திப்பிலியும் ஆகும்;
**காமமே** விரகம் ஆசை;
**கணிச்சி** தான் மழுவே, தோட்டி;
**பூமனே** பிரமன், செவ்வாய்;
**புரையோரே** கீழோர், மேலோர்;
**சேமமே** காவல், இன்பம்;
**தெக்கிணம்** வலம், தெற்கு ஆகும்.

150. **காமுகன்** விடன், வேள், மால் ஆம்;
**காது** என்ப கொலையும், காதும்;
**கோமளம்** பக, வனப்புக்,
கூறிய இளமைக்கும் பேர்;
நாமம் ஆம் **கலித்தல்** மிக்கு,
நற்பொலிவு, எழுச்சி, ஓசை;
**மாமையே** நிறம், வனப்பு ஆம்;
**மலயசம்** சந்தம், தென்றல்.

**யகர எதுகை**

151. **காயம்** மெய், விண் வெண்காயம்;
பெருங்காயம், கறி, கரித்தல்;
**நேயம்**, நெய், எண்ணெய், அன்பு, ஆம்;
**நிறம்** என்ப மருமம், காந்தி;
**ஆயமே** கவற்றின்தாயம்,
ஆதாயம், மாதர் கூட்டம்;
**சாயல்** என்பது மேம்பாடு,
தரும் அழகுடனே, மென்மை.

152. **லயம்** நீர், புட்பொது, வலிப்பேர்;
**வயல்** வெளி, பழனமும் பேர்;
**சயம்** வெற்றி, சருக்கரைப் பேர்;
**சடம்** உடல், வஞ்சம், பொய் ஆம்;
**நியமமே** நியதி, வீதி,
நிச்சயம், நகரம், கோயில்;
**இயம்** என்ப ஒலியே, வார்த்தை,
வாச்சியம் இம்முப் பேரே.

153. **அயம்** என்ப நீர் தடாகம்,
ஆட, வெம்பரி, இரும்பு ஆம்;
**சயம்** மென்மை, குளமே, ஆழம்,
களிறு, கீழ், பெருமை, தேய்வு ஆம்;
**பயம்** என்ப கதை, நீர், அச்சம்,
பாலொடு, பயன் பேர் ஐந்தே;
**அயன**மே வழியின் நாமம்,
ஆண்டனில் பாதிக்கும் பேர்.

154. **பயிர்** ஒலி, பயிரே, பைங்கூழ்,
பறக்கும் புட்குரல் இந்நாற்பேர்;
**கயினி**யே அத்த நாளும்,
கைம்மையும் இருபேர் காட்டும்;
**வயிர**மே செற்றம், கூர்மை,
வச்சிரம், ஓர்மணியே, சேகு;
**கயில்** பிடர்த்தலையே, பூணின்
கடைப்புணர்வு இருபேர்தானே

155. **ஐயமே** பிச்சை ஏற்கும் ஓடு,
அனுமானம், பிச்சை;
**ஐயனே** மூத்தோன், சாத்தன்,
அப்பன், ஈச்சுரன் நாற்பேரே;
**தொய்ய**லே உதவும், சேறும்,
துயரமும், மகிழ்ச்சியும் பேர்;
**மொய்** செருக்களம், போர், யானை,
மூசல், வண்டொடு, திரள் பேர்.

156. **வயவனே** வீரனோடு,
வலியான், காதலனும் ஆகும்
**குயிறலே** செறிதல், கூவல்
குடைதல், பண்ணுதல் நாற்பேலே;
**வயின்** இடம், உதரம், வீடு ஆம்;
வயாக் கரு, வருத்தம், காதல்;
**மயல்** செத்தை, மயக்கம், பேய் ஆம்;
**மறவ**ரே வயவர், வேடர்.

157. **குயிலே** கோகிலமும், சொல்லும்,
கொண்மூவும், துளையும் நாற்பேர்;
**வயமா**வே, குதிரை, சிங்கம்,
மதகரி, புலியும் ஆகும்;
**வியல்** என்ப விசாலம், பீடு ஆம்
**வேய்** துளை, ஒற்று, மூங்கில்;
**மயிலை**யே மீனராசி
**மீன்** இருளாட்சி முப்பேர்.

158. **சயிந்தவம்** குதிரையோடு,
தலையும், இந்துப்பும் ஆகும்;
**குயம்** தனம், இளமையோடு,
கூர் அரிவாளும் முப்பேர்.
**நயந்தானே** நண்பன், கொண்கன்;
**நலம்** விருச்சிகமே, நன்மை,
**பயம்பு** என்பது ஆனை வீழும்
படுகுழி, பள்ளம் ஆமே.

159. **இயல்** நடை, தமிழ், சாயல்பேர்;
**ஏல்வையே** பொழுது, வாவி;
**குய** என்ப கறிகரித்தல்,
குளிர் நறும்புகை இரண்டு ஆம்;
**செயிர்** என்ப சினம், குற்றப்பேர்;
**சேடி** விஞ்சையர் ஊர், பாங்கி;
**உயவை** நாக்கணமே, முல்லை,
உற்ற கான்யாறும் ஆமே.

160. **செய்யலே** ஒழுக்கம், காவல்,
சேறு, செய்வினை நாற்பேரே;
**நெய்தலே** கடல்சார்பூமி,
நெய்தற்பூமி, சாபறைப்பேர்;
**வெய்யோன்** ஆதவனே, தீயோன்,
விரும்பினன் தனக்கும் அப்பேர்;
**ஐயையே** உமையாள், துர்க்கை,
மகள், அருந்தவப்பெண், ஆசான்.

161. **ஐ** அழகு இடைச்சொல், கோழை,
அரசனோடு, இருமல், சாமி;
**மை** என்பது அஞ்சனம், கார்,
மலகு, இருள், ஆடு, மாசு ஆம்;
**கை** இடம், படையுறுப்பு, ஒப்பனை,
செங்கை, சிறுமை, சீலம்;
**வையம்** தேர், ஏறு, உரோணி,
வசுந்தரை, சிவிகை, ஊர்தி.

162. **சேய்** குகன், இளமை, தூரம்
செம்மை, சேண், சிறுவன், செவ்வாய்;
**வாய்** குழல், இடம், வாய்மைப்பேர்;
**மாருதி** அனுமன், வீமன்;
**ஆய்தலே** நுணுக்கம், தேர்தல்;
**ஆறு** என்ப வழி, நதிப்பேர்;
**வேய்தல்** சூடுதல், மூடல் பேர்;
**விநாயகன்** அருகன், முன்னோன்.

163. **அயிர்** கரும்பின் தேம் கட்டி,
ஆன்ற நுண்மயலே, நுண்மை;
**செயல்** தொழில், ஒழுக்கம், என்ப;
**தெய்வமே** கடவுள், ஊழ் ஆம்;
**நயம்** என்ப மகிழ்ச்சி, இன்பம்,
நன்மை, நற்பயன் நாற்பேரே;
**பெயர்** என்ப பெருமை, கீர்த்தி,
பேசும் நாமப்பேர் ஆமே.

**ரகர எதுகை**

164. **சிரகமே** கரகம் ஆகும்,
சென்னியிற் சோடும் அப்பேர்;
**கரகமே** 'ஆலங்கட்டி'
கமண்டலம், துணி, நீர், கங்கை;
**மரபுதான்** முறைமை, தொன்மை;
**மறல்** என்ப பிணக்கும், கூற்றும்;
**சரபம்** எண்காற்புள் என்ப,
வரையாடு தானும் ஆமே.

165. **இரதமே** புணர்ச்சி, சூதம்,
இன்சுவை, அரைஞாண், பொற்றேர்;
**அரணமே** கவசம், வேலி நாற்பேர்;
அணிமதில், வேலி நாற்பேர்;
**கரணம்** எண், மனாதி, கூத்துக்,
கலவி, காரணம் ஐம்பேரே;
**சரணம்** தாள், மறைபுகல் பேர்;
தன்னம் ஆன் கன்றே, அற்பம்.

166. **உரம்** என்பவலியே ஞானம்,
ஊக்கமே, மார்பு நாற்பேர்;
**சிரம்** என்ப நெடு காலப்பேர்,
சென்னியும் அன்னதே ஆம்;
**புரம்** என்ப புரி, முன் மெய்ப் பேர்;
**புரவலன்** வள்ளல், வேந்தன்;
**கரம்** என்ப கிரணம், செங்கை,
கழுதை, நஞ்சு, இறுத்தலும் பேர்.

167. **அரவம்** நூபுரம், பாம்பு, ஓசை;
**ஆய்வு** என்ப வருத்தம், ஆய்தல்;
**பரவை** வாரதி, பரப்புப்
பங்கயமாதின் கூத்தே;
**இரலையே** கலை ஊதுங்கொம்பு
இரண்டுடன், முதல்நாள் என்ப;
**அரசுமன்** இராச்சியப்பேர்;
**அம்பி** நாவாயே, தெப்பம்.

168. **அரம்பை** தெய்வப்பெண், வாழை;
**ஆணுவே** இரதம், நன்மை;
**சரம்** தனி மணிவடம், போர்,
சாயகம், நாணற்புல் பேர்;
**நரந்தம்** என்பது நாரத்தை,
நாறும் கத்தூரிக்கும் பேர்;
**கருங்கையே** கரந்து பன்னும்
கற்படை, நுழைவாயில் பேர்.

169. **ஆரமே** பதக்கம், முத்தம்,
ஆத்தி, சந்தனமே, மாலை;
**வாரம்** நீர்க்கரையே, அன்பு;
மலைச்சாரல், கிழமை பங்கு ஆம்;
**தாரம்** வல்லிசை, நா, வெள்ளி,
தலைவி, ஓர் இசை, கண் என்ப;
**கோரம்** சோழன்மா, வட்டில்,
கொடுமை, பூமொட்டு, வாசி.

170. **இராசியம்** மறைவே, யோனி,
இறப்பு என்ப, மிகுதி, போக்கு ஆம்;
**பராகமே** இரேணு ஆகும்,
பரிமள மலர்த்தூளும் பேர்;
**துரோணமே** சிம்புள், காக்கை,
தும்பை, வில்லொடு, பதக்கு ஆம்;
**இராகமே** கீதம், செம்மை,
இச்சையே, நிறமும் ஏற்கும்.

171. **பரி** பரி, சுமத்தல், வேகம்,
பாதுகாத்திடல், வருத்தம்;
**புரி** வளை, விரும்பல், செய்தல்,
புரத்தொடு, கயிறு, கட்டு ஆம்;
**பரிதலே** அறுத்தல், அன்பு,
பகர்ந்திடில் இரங்கலும் பேர்;
**வரி** சுணங்கு, எழுத்துப், பாட்டு,
வாரிதி இறையே, நெல்லு.

172. **சரி**தரவளை, வழிப்பேர்;
**சராவமே** அகல், சலாகை;
**கரியவன்** சனியின் பேர் ஆம்,
கண்ணன், இந்திரனும் ஆமே;
**பரிகமே** கிடங்கு, மேடை,
பகர்மதில், கணையம் நாற்பேர்;
**கரில்** குற்றம் காழ்த்தலும் பேர்,
காதை சொல், கதையும் ஆமே.

173. **மூரி** ஏறு, எருமை, ஆற்றல்,
முறை, பீடு, நெரிவும் ஆமே;
**வாரி** நீர், கதவு, வெள்ளம்,
மதில், கடல், வருவாய், வட்டை;
**நாரி** பன்னாடை, பெண்ணே,
நறவு, வில்நாணி நாற்பேர்;
**பாரி** ஓர் வள்ளல், கட்டில்,
பாரி, கள், தூது, முந்நீர்.

174. **அருகலே** சுருங்கல், சார்தல்;
அமுதமே சுதை, நீர், மோக்கம்.
**பொருளே** சொற்பொருள், பல்பண்டம்,
பொன், பண்பு, பிள்ளை, வாய்மை;
**குரு** நிறம், ஓர் நோய், தேயம்
குரவன், பாரம், வியாழன்;
**அருணம்** என்பது, மான், செம்மை,
ஆடு, எலுமிச்சை, நாற்பேர்.

175. **முருகு** கள், இளமை, நாற்றம்,
முருகவேள், விழா, வனப்பு ஆம்;
**மருமானே** மருமகள் பேர்;
வழித்தோன்றல் பேரும் ஆமே;
**இருசு** பண்டியுள் இரும்பு,
செவ்வை என்று இருபேர் என்ப;
**கருமை**யே பெருமை ஆகும்,
கறுப்பொடு, வலியும் ஆமே.

176. **கிருத்திமம்** தோலே, பண்ணல்,
கெட்ட பொய், விட்ட பூதம்;
**விருத்தி**யே தொழில், இலாபம்,
விரிபொருள், வளர்ச்சிக்கும் பேர்;
**துருத்தி** ஆற்றிடைக்குறைப்பேர்,
தோலும் ஆம், துட்டைக்கும் பேர்;
**அரத்தமே** இரத்தம், செம்மை,
அரக்கொடு, உற்பலம், கடம்பு.

177. **சீர்** செல்வம், தாளவொத்துச்,
சீர்த்தி, கா, தண்டே பாரம்;
**தார்** கொடிப்படை, பூத், தண்டு,
தாமம், கிங்கினியின் கோவை
**சூர்** என்ப நோயே, அச்சம்,
அஞ்சாமை, அணங்கும் சொல்லும்;
**கார்** நீர், வெள்ளாடு, மேகம்,
கறுப்பு, இருள், மாரிக்காலம்.

178. **ஆர்** கூர்மை, ஆத்தி, தேரின்
அகத்துறு கதிரும் ஆகும்;
**பீர்** என்ப முலையிற் பாலும்,
பீர்க்கொடு, பசலைக்கும் பேர்;
**வார்** என்ப நெடுமை, கச்சு,
மன்னும் நீர், நேர்மை நாற்பேர்;
**நேர்** சமம், ஈதல், பாதி
நெடில், உடன்பாடு, நுட்பம்.

179. **அருணன்** சூரியன், தேர்ப்பாகன்,
ஆதித்தன், புதன் முப்பேரே;
**வருணமே** குலம், நீர், ஆகும்;
**மகன்** என்ப சிறந்தோன், மைந்தன்;
**கரணி** பார், இரவி, வெற்பு, ஆம்;
**தையல்** பெண், அழகும் ஆகும்;
**கரிணி**யே முழையும், வெற்பும்,
களிற்றொடு, பிடியும் காட்டும்.

180. **மாரியே** விளிவு, கள்ளு,
வடுகி, நோய், மேகம் ஐம்பேர்;
**ஓரி** ஆண்மயிர், ஓர்வள்ளல்,
முதுநரி, முசு என்று ஓதும்;
**காரி** ஓர் வள்ளல், ஐயன்,
கடு, வனி, வடுகன், காக்கை;
**தூரியம்** இடபம், ஆடை,
துந்துபி, எழுதுங்கோலே.

181. **பிரமமே** வேதம், வேள்வி,
மந்திரம், பிரமன், மாலோடு,
**இ**ரவி, தீ, முனிவர், முத்தீ,
ஈசன், அம்புலி, பன்னொன்றே;
**அரசனே** வியாழன், மன் ஆம்;
**அம்பணம்** தோணி, யாமை;
**குரல்** கதிர், சிறகு மாதர்
கூந்தல், யாழ்நரம்பு நாற்பேர்

182. **தோரை** நெல்விகற்பம், மூங்கில்
அரிசி, கைவரை சொல் முப்பேர்;
**ஆரை**யே மதில், புற்பாய் ஆம்;
**அகலுளே** பரப்பு, ஊர், நாடே;
**ஓரை**யே மாதர் கூடி
விளையாடலுடன், இராசி;
**தாரை** கண், மழை, நேரோடல்;
தாரகை, வழியே, கூர்மை.

183. **ஊர்தி** தேர், விமானம், பாண்டில்,
உம்பலே, சிவிகை, பாய்மா;
**ஆர்வமே** நரகம், அன்பு;
**அகலம்** மார்பொடு, விசாலம்;
**ஆர்வலர்** கொண்கர், அன்பர்;
**அணு** என்பது உயிர்நுண்மைப்பேர்;
**ஆர்தலே** நிறைதல், உண்டல்;
அகளம்தான் மிடா, நல்தாழி.

184. **பாரமே** கவசம், தோணி,
பல்லணம், பொறையினோடு,
நீருறு கரை, வன்பாரம்,
நிறை, **தரை** நிகழ்த்தும் எண்பேர்;
**சூரனே** இரவி, தீ நாய்;
**துகள்** என்ப குற்றம், தூள் ஆம்;
**சாரங்கம்** மானும், வண்டும்,
சாதகப்புள்ளும் ஆமே.

185. **ஆரல்** கார்த்திகைநாள், செவ்வாய்,
அரண் உறுப்பு, ஒருமீன் நாற்பேர்;
**சாரலே** மருதயாழின் –
இசையொடு, சைலப்பக்கம்;
**மூரலே** நகை, பல், சோறு ஆம்;
**முரம்பு** என்பமேடு, பாறை;
**கூரல்** புரட்சிறகு; மாதர்
ஓதியும் இருபேர் கூறும்.

186. **சாரிகை** பூவை, சங்கம்,
சுழல்காற்றுத் தானும் ஆகும்;
**காரிகை** அழகு, பெண்ணே,
கலித்துறை, ஓர் நூற்கும் பேர்;
**வாரணம்** கவசம், கோழி,
தடை, சங்கு, வாரி, கைம்மா;
**பூருவம்** முதுமை, முன்பு,
கிழக்கு என்றும் புகலலாமே.

187. **ஏர்** அழகு, உழுபெற்றப்பேர்;
**இராசி**தான் ஒரை, கூட்டம்;
**பார்** உலகம், தேர்ப்பார் ஆம்;
**பயல்** பள்ளம், பாதி, சிற்றாள்;
**போர்** அமர், சதயத்தோடு,
புகலும் நெல் முதலாம் சும்மை;
**பீருவே** அச்சமுள்ளோன்,
பெயரொடு, புருவம் ஆமே.

188. **அருப்பம்** ஆரிடம், நோய், காடு ஆம்,
அரணுடன், ஊரும் அப்பேர்;
**மரக்கால்** ஆயிலியம், சோதி,
மாயவன் ஆடல் முப்பேர்;
**நிரப்பு** என்ப மிடி, நிறைப்பேர்;
**நிறை** அழியாமை, நீர்ச்சால்;
**துருகமே** அரண், கத்தூரி,
குங்கும மரமும் சொல்லும்;

189. **குருதியே** சிவப்பு, இரத்தம்,
குசன் எனக் கூறும் முப்பேர்;
**பரிதியே** ஊர்கோள் வட்டம்,
பாற்கரன், நேமி, நாற்பேர்;
**சுருதியே** ஒலி, வேதப்பேர்;
**சுரம்** அருநெறி, கான், மார்க்கம்;
**இரதி** பித்தளை, பெண்யானை,
மதன்தேவி, இச்சை நாற்பேர்.

190. **புரை** குற்றம், உவமை, இல்லம்,
புழை, உயர்ச்சியிம் ஐம்பேரே;
**விரை** மணம், சாந்து, தூபம்;
**வீரை**தான் துயரம், வாரி;
**நரை** வெள்ளை, இவுளி, வெண்மை,
நந்தி, நற்சவரி, நாரை;
**சுரை** கள், ஆன்முலை, துளைப்பேர்;
**துளும்பலே** திமிறல், துள்ளல்.

191. **மருள்** என்ப குறிஞ்சி யாழின்
திறத்தொடு, மயக்கமும் பேர்
**இருள்** ஒரு நரகம், மையல்,
இருளொடு, கருமை என்ப;
**பொருநர்** போர்த்தலைவர், கூத்தர்,
புரவலர், பாணர், வீரர்,
**இருபிறப்பு** எயிலும், பார்ப்பும்,
இந்துவும், புள்ளும் ஆமே.

192. **மருதமே** ஒருமரம், செய்,
மருதம், அந்நிலப்பாடல் பேர்;
**எருவையே** கொறுக்கை, கோரை,
கழுகு, செம்பு, இரத்தம் என்ப;
**தருமராசன்**தான் புத்தன்,
சண்டனோடு அருகன்தான் ஆம்;
**கரி** என்பது இருந்தை, சான்று,
கறையடி, சேகு நாற்பேர்.

193. **கருவி** பல்லியம், துணைக்கா –
ரணங்கள், யாழ், தவசம், ஈட்டம்,
பொருவடைக்கலம், தொடர்ச்சி,
புயல், பலவினைப்பேர் கூட்டம்,
பரியின் பல்லணமே, ஆடை,
கசை பதின்முப்பேர் பன்னும்;
**சரிகையே** கவசம், வாள் ஆம்,
**துணை** பிண்ணாக்கு, இறைச்சி, ஓசை.

194. **குருகு** புள், இளமை, நாரை,
கொல்லைமூக்குக், கோழி,
சரி, வெள்ளை, மூலநாள், வா
சந்தி ஒன்பான்பேர் சாற்றும்;
**முரசே** உத்தரட்டாதிப்பேர்,
இயம் என்று மொழியலாமே;
**தரளமே** உருட்சி, முத்து ஆம்;
சார்வு என்பது இடமும், பற்றும்.

195. **முரண்** வலி, பகை ஆம் என்ப;
**மொய்ம்பு** தோள், வலியும் ஆகும்;
**உரை** என்ப கிளவி, தேய்வு ஆம்;
**உவா** த் தந்தி, இளையோன், பௌவம்;
**ஞெரேல்** ஒலி, விரைவும் ஆகும்;
**நிதி** இருநிதி, பொன் என்ப;
**உருநிறம்**, வடிவு, அட்டை;
**ஓதனம்**, சோறே, உண்டி.

196. **அரி** கிளி, புணரி, மால், தேர்,
ஐம்மை, இந்திரன், கால், காந்தி,
பரி, புகர், பன்றி, சிங்கம்,
பகை, புகை, பாயல், சோலை,
வரி, மதி, சேகு, தேரை,
வானரம், இயமன், மூங்கில்,
எரி, புரை, நிறம், பொன், பாந்தள்
இரவி, கண், வரி, தார், பச்சை.

197. அரிசி, நெற்கதிர், கள், கூர்மை,
அளி, படைக்கலமே, ஈர்வாள்,
அரிதலே, சயனம், நேமி,
அடல், விசி, பறை, அரித்தல்,
பரிபுரமதனுள் பெய்த பரலோடு,
இவ் ஆறேழ் ஐந்து ஆம்
**ஆரிதமே** பசுமை, திக்கு ஆம்;
**ஆர்ப்பு** ஒலி, சிரித்தல் பேரே.

198. **அருவியே** மலைச்சார்வு ஆறு,
அரிதினைத்தாளும் ஆகும்;
**அரலையே** கனி வித்து, ஆழி,
மரல், கழலையும் ஆம் என்ப,
**கரடமே** மதம் பாய்கின்ற
சுவட்டொடு, காக்கை ஆகும்;
**சுரியல்**தான் பெண்மயிர்க்கே
சொல்லும், ஆண்மயிர்க்கும் பேர் ஆம்.

199. **திரு** என்ப கமலை, செல்வம்,
சிறப்பொடு முப்பேர் செப்பும்;
**பரிவு** என்ப துன்பம், இன்பம்,
பகரும் அன்பிற்கும் அப்பேர்;
**கரையே** நீர்க்கரை, சேர்வு ஆகும்;
கைத்து நீள்நிதி, வெறுப்பு ஆம்;
**சுரகுரு** மகவான், தேவ
மந்திரி இருபேர் சொல்லும்.

200. **அரற்றலே** அழுகை, ஓசை;
**ஐது** என்ப விரைவு, நொய்து ஆம்;
**இரத்தம்** செந்நீர், சிவப்பு ஆம்;
**இலாங்கலி** அலமி, தேன், காந்தள்;
**அரக்கு** என்ப மெழுகு, கள்ளின்
விகற்பமும், சிவப்பும் ஆகும்;
**அருச்சுனம்** மருது வெண்மை;
அறிக்கைதான் அறிவு பற்று ஆம்.

201. **அரந்தை** என்பது குறிஞ்சி
யாழிசை, துன்பம் ஆகும்;
**அருந்தலே** அருமை, உண்டல்;
**அளித்தல்**தான் கொடுத்தல், காத்தல்;
**அரங்கம்** ஆற்றிடைக்குறைப்பேர்,
ஆடிடம், சபையும் அப்பேர்;
**அரங்கு** போரிடம், வட்டாடும்
இடம், சபை, மனை, விகற்பம்.

202. **முருந்து** என்ப மயிலின்தோகை
முதல்முள்ளுத், தவளம் ஆகும்,
**விருந்தமே** கிளையின் கூட்டம்,
விலங்கின் கூட்டமும் என்று ஆகும்;
**குரங்கு** வானரம், விலங்கின்
பொது, மிகு கோணல் ஆகும்;
**எருந்து** உரல் கிளிஞ்சில் என்பர்;
இடம் செல்வம், விசாலம், வாமம்.

203. **ஆரியர்** மிலேச்சர், நல்லோர்;
**ஆன்** என்பது இடைச்சொல், ஆஆம்;
**ஆரியே** கதவு, சோழன்,
அழகொடு, மேன்மைக்கும் பேர்;
**காருகர்** தந்துவாயர்,
கடுங்கொலையாளர், வண்ணார்;
**தாரசாரி** என்ப காளி,
சண்முகன் தானும் ஆமே.

204. **சார்**கடல், ஒருதாரப்பேர்;

**சான்றோன்** மான்தலைநாள், பானு;

**வேர்** என்ப மரவேர், வேர்வு ஆம்;

**விழைச்சு** நல் இளமை, போகம்;

**பாராவாரம்**தான் வாரி,

கடற்கரை இருபேர் மன்னும்;

**காரணர்** ஒற்றர் என்பர்,

சமண்முனிவர்க்கும் பேர் ஆகும்.

205. **அராகம்** செந்நிறமே, பாலை

யாழ், முடுகியற்பாட்டு, ஆசை;

**கரணு**வே பிடியா னைக்கும்

கடுங்கொலையானைக்கும் பேர்;

**கிராண**மே கிராணம், மூக்கு அம்,

கிளர் சிறுவட்டிலும் பேர்;

**கரீரமே** மிடா, அகத்தி,

கரியின் பல்லடி, முளைப்பேர்.

**லகர எதுகை**

206. புலவர் பாடுநரே, கூத்தர்,

புதன், உம்பர், கவிகள், ஒவர்;

**வலவனே** வெற்றியாளன்,

மருவும் தேர்ப்பாகன், மாயோன்;

**அலகு** நெற்கதிரே ஆதி,

பலகறை, வளம்பு, எண், ஏதி;

**அலரி** கண்வரி, அருக்கன்,

அழகு, ஒருமரம், பூ ஆமே.

207. **ஆலமே** வடவிருக்கம்
அடு நஞ்சோடு, அலர் பூ, நீர் ஆம்;
**மூலம்** வேர், முதலே ஏது,
முதிர்வுறு கிழங்கு, ஓர்நாள் ஆம்;
**சீலமே** குணம், தண்டித்தல்,
திகழ் சரித்திரம் முப்பேரே;
**சாலமே** வலை, சாலேகம்
மராமரம், சபை, மதில் பேர்.

208. **காலம்** வைகறை, காலப் பேர்;
கலம் அலம், யாழ், பூண், நாவாய்;
**சாலகம்** காலதர்ப் பேர்
தானே, பூ மொட்டும் ஆகும்;
**தாலம்** உண்கலமே, நாவே,
தராதலம், பனையே நாற்பேர்;
**ஆவல்** ஆகுதல், ஒலிப் பேர்;
**அறுவை** சித்திரைநாள், ஆடை.

209. **இலம்பகம்** அத்தியாயம்
நுதற்சூட்டு என்று இருபேர் ஆமே,
**இலஞ்சி** மா, வாவி, கொப்பூழ்,
எயில் குணம், மகிழே, ஏரி;
**பலம்**கனி, பயன், காய், சேனை,
பழம், கிழங்கு அறுபேர் ஆகும்;
**அலங்கல்** என்பது பூமாலை,
அசைவொடு, தளிர், இலங்கல்.

210. **ஒலி** என்பது இடியே, காற்றே,
ஓசை என்று ஆகும்முப்பேர்;
**ஒலியலே** யாவம், தோலும்,
உடுத்த ஆடையும், பைந்தாரும்;
**கலுழியே** கான்யாறு என்ப,
கலங்கிய நீரும் ஆமே;
**கலை** மதி, பங்கு, தூசு,
கல்வி, நூல், இரலை, காஞ்சி.

211. **பீலியே** ஆலவட்டம்.
பெருவரை, கலாபி, தோகை;
**பாலிகை** உதடு, வட்டம்,
படைவாளின்முட்டியும் பேர்;
**வேலி** ஊர் மதில், காவல்பேர்;
**மெத்தை** மெல்லணையே, சட்டை
**தோல்** இபம், வனப்பு, வார்த்தை,
துருத்தி, தோற்பலகை ஐம்பேர்.

212. **பாலை** ஓர் மரம், நிலம், அந்
நிலத்தினிற் பாடலும் பேர்;
**வேளையே** கடல், அதற்கு
மேவிய கரையே, காலம்;
**மாலையே** இரவோடு, அந்தி,
மாலிகை, ஒழுங்கு நாற்பேர்;
**சாலையே** குதிரைப் பந்தி,
அறப்புறம் தானும் ஆமே.

213. **அல்லி** வெள்ளாம்பல், காயா,
அகவிதழ் ஆகமுப்பேர்;
**அல்** இரா, இருளே என்ப;
**ஆகம்** மார்பு, உடலும் ஆமே;
**சில்லி**யே வட்டம், கீரை,
தேருருள், சிள்வீடு என்ப;
**வல்லி** ஆய்ப்பாட்டி வள்ளி
வரைவொடு நிகளம் ஆமே.

214. **இல்** இல்லாள், இல்லை என்றல்,
இராசி, சா, இடம், வீடு ஆறே;
**மல்** வளம், வலியினோடு,
மாயவன் ஆடல் முப்பேர்;
**சில்லை** என்பது பிரண்டை,
சிள்வீடு, தூர்த்தைக்கும் பேர்;
**ஒல்லை**யே விரைவு, தொல்லை,
கடுப்புடன், சிறுபோது ஆமே.

215. **வில்** என்ப மூலநாள் ஆம்,
வெஞ்சிலை, ஒளியும் அப்பேர்;
**வல்** வலி, விரைவு சூது ஆம்;
**மலர்தலே** எதிர்தல், தோன்றல்;
**புல்** புலி, புணர்ச்சி, புன்மை,
புதல், பனை, அனுடநாள் ஆம்;
**கொல்** என்பது அசைச்சொல், ஐயம்,
கொலை யே வலி, வருத்தம் நாற்பேர்.

216. **மால்** புதன், பெருமை, மேகம்,

மாயவன், மயக்கம், காற்றே;

**ஆலோடு** ஆல் இரண்டு சொல்லும்

ஆம் என்பது; அல்லவும் பேர்;

**வால்** வெண்மை, மிகுதி, தூய்து ஆம்;

**வசந்தனே** தென்றல், காமன்;

**சால்பு** மாட்சிமை, சான்றாண்மை

சாற்றிய இருபேர்தானே.

217. **வலம்புரி** சங்கு, நதியா

வர்த்தம், ஓர்மரம் முப்பேரே;

**புலம்பு** ஒலி, தனிமை, அச்சம்;

பொய் என்ப பொக்கம், பொந்து ஆம்;

**சிலம்பு** ஒலி, ஞெகிழி, குன்று ஆம்;

**செருந்தி** பஞ்சரம், வாட்கோரை;

**விலங்கு** கால் – தளை, குறுக்கு,

மிருகத்தின் பொதுவும் ஆமே.

218. **உலகமே** திசை, விண் பூமி,

உணர்குணம், சனம், உயர்ந்தோர்;

**அலவனே** ஞெண்டு, பூனை,

அம்புலி, கடகராசி;

**இலயமே** கூத்தும், கூத்தின்

விகற்பமும் இருபேர் என்ப.

**வலவை** வஞ்சப்பெண், வல்லோன்;

**வருடை**தான் கிம்புள், ஆடு ஆம்.

219. **கலாபமே** மணிவடம்,
மேகலை, மயிலிறகு முப்பேர்;
**சிலீமுகம்** முலைக்கண், வண்டு,
சித்திர புங்கம்தான் ஆம்;
**சலாகை** நன்மணி, நாராசம்,
சவளமும் ஆகும் என்ப;
**விலோதம்** பெண்மயிர், பதாகை;
விடம் என்ப நஞ்சும், தேளும்.

220. **செல்** இடி, ஏவல், மேகம்,
சிதலையும் ஆகும் என்ப;
**எல்** ஒளி, பகல், இகழ்ச்சி,
இரவுடன், இரவு ஐம்பேர்;
**சொல்** உரை, கீர்த்தி, நெல் ஆம்;
**தொடுத்த**லே வளைத்தல், கட்டல்;
**கல்** ஒலி, மலை, கல், என்ப;
**கரண்**டம் நீர்க்காக்கை, செப்பு ஆம்.

221. **கலி** வஞ்சம், ஒலியே வாரி,
கடையுகம், வலி ஐம்பேரே;
**சிலை** ஒலி, மலை, கல், வில் ஆம்
**செடி** ஒளி, செறிவு, தீது ஆம்;
**தலம்** என்பது இலை, புவிப்பேர்;
**தலை** இடம், தலை, விண், ஆதி;
**தல**மே மஞ்சாடி, எள் ஆம்;
**திலகம்** மஞ்சாடி, பொட்டு ஆம்.

222. **வல்லை** கான், விரைவு, மைந்து ஆம்;
**வடம்** மணி வடம், ஆல், தாம்பு;
**பல்லம்** ஓர் கணக்குப், பாணம்;
பல்லணம், கரடி நாற்பேர்;
**மல்லலே** வலி, வளப்பேர்,
**வாயில்** ஐம்புலன், கடைப்பேர்;
**முல்லை** மல்லிகையே, வென்றி,
முல்லை நன்னிலம், கற்பு ஆமே.

223. **கோல்** என்பது ஈட்டி, வாட்கோல்,
துகிலிகை, துலாம், சம்மட்டி,
சில மன்னவன் தன் செங்கோல்,
திரட்சி, யாழ் நரம்போடு, அம்பு,
நீல அஞ்சனக் கோலோடு,
நீள் இலந்தையும் பன்னோர்பேர்
**காலிலி** அருணன், பாம்பு,
காற்றொடு முப்பேர் ஆமே.

224. **கூலமே** பண்ணிகாரம்
புனற்கரை, கோ, விலங்கின்
வாலொடு, ஆவணமே, பாகல்,
வரம்பொடு, குரங்கு எண்பேரே;
**கால்** இடம், மரக்கால், பிள்ளை,
குறுந்தறி, வனம், கரம்பு, ஊற்றம்
காலன், அங்குரம், கால், வாயக்கால்
காற்றுத், தேருருள் பன்மூன்றே.

225. **கோலமே** அழகு, பன்றி,
பாக்கு, நீர்க்கொழுந்து, பீர்க்கு ஆம்;
**மாலியே** இரவி கள் ஆம்;
**மாந்தலே** மரித்தல், உண்டல்;
**வேல்** அயில், படைக்கலப் பேர்
**வேதண்** டம் கைலை, வெற்பு ஆம்;
**சாலி** நெற்பொதுவும், கள்ளும்,
அருந்ததி தானும் ஆமே.

226. **உலவை** கால், மரத்தின் கொம்போடு,
உறு தழை, விலங்கின்கோடு ஆம்;
**மலைதலே** பொரல், சூடல் பேர்;
மந்திரி குபேரன், வெள்ளி;
**அலர்** பழி, விரிபூ, நீர் ஆம்;
அவிர்தலே ஒளி, பீறல் பேர்;
**எலி** பூரநாள், எலிப்பேர்;
**இரணம்**, பொன் கடன் மாணிக்கம்.

227. **ஆலயம்** நகரம், கோயில்,
ஆனையின்கூடம் முப்பேர்;
**பாலமே** மழு, நெற்றிப் பேர்;
பவித்திரம் குசி, தருப்பை;
**நூலோர்** மந்திரிகள், பார்ப்பார்,
நுவல் கவிப்புலவர்க்கும் பேர்;
**வேலாவலயம்**தான் பூமி,
விரிகடல் இருபேர் ஆமே.

228. **சூலியே** கருப்பப் பெண்ணும்,
துர்க்கையும், சிவனும் முப்பேர்;
**வாலியே** அலாயுதன், கிட்
கிந்தையின் மன்னன் பேர் ஆம்;
**பால்** புடை, இயல்பு, திக்குப்,
பகுத்தல், பால் என்னும் ஐம்பேர்
**ஏலமே** மயிர்ச்சாந்தோடே,
ஏலத்தின் பேரும் ஆமே.

**வகர எதுகை**

229. **நவம்** என்ப புதுமை, கேண்மை,
ஒன்பது, நற் கார்காலம்;
**கவனமே** கலக்கம், வெம்மை,
குதிரையின் கதி, போர், காடு ஆம்;
**உவணமே** கலுழன் ஆகும்,
உயர்ச்சிக்கும், கழுகுக்கும் பேர்,
**பவனமே** இராசி, பூமி,
படர் காற்று, மனையே, கோயில்.

230. **புவனம்** நீர், புவியும் ஆகும்;
**புரத்தலே** காத்தல், வண்மை;
**நுவணை** நூல், நுண்மை, பிண்டி;
**நூலே** சாத்திரமும், தந்தும்;
**தவ** என்ப மிகுதி, குன்றல்;
**தந்தே** நூல், சாத்திரப் பேர்;
**சிவம்** நன்மை, குறுணி முத்தி;
**சீவனே**, உயிர், வியாழன்.

231. **இவறலே** மறவி, ஆசை
என்ப, பேரிச்சைக்கும் பேர்;
**இவர்தலே** எழுச்சி, ஆசை;
ஏறுதல், சேறல், மேவல்;
**சுவவு** என்ப புள்ளின் மூக்கும்,
சுவர்க்கமும், சுண்டலும் பேர்;
**குவவு** என்ப திரட்சி மற்றும்
குவிதலே, பெருமைக்கும் பேர்.

232. **தவிசு** என்ப தடுக்கு, மெத்தை,
இலகடம் முப்பேர் தானே;
**சவி** மணிக்கோவை, செவ்வை,
சாற்றிய வனப்புக் காந்தி;
**நவிரமே** மஞ்சை புன்மை,
நல் மலையுடனே, உச்சி;
**நவிலல்** சொல்லுதல் பண்ணல் பேர்;
**நவியமே** மழு, கோடாலி.

233. **கவுசிகம்** விளக்குத் தண்டு, ஓர்
பண், பட்டு, கடிய கோட்டான்;
**சவுரியே** திருமால், கள்வன்,
சனி, யமன் இனைய நாற்பேர்;
**மவுலியே** முடி, கோடீரம்;
**வட்கல்** என்பது நாண், கேடு ஆம்;
**கவலை** செந்தினை, ஓர் வல்லி,
கவர்வழி, துன்பம் நாற்பேர்.

234. **சேவகம்** வீரம், யானை
துயிலிடம், துயலும் செப்பும்;
**சீவினி** ஓர் மருந்து,
செவ்வழித்திறத்து ஓர் ஓசை;
**ஆவணம்** புனர்தம், வீதி,
அங்காடி, உரிமை நாற்பேர்;
**நீவியே** துடைத்தல், ஆடை,
நெருங்கு கொய்சகம் முப்பேரே.

235. **உவளகம்** மதில், ஓர் பக்கம்,
ஊருணி, பள்ளம், உள்ளல்;
**கவடு** என்ப கப்பு, யானைக்
கழுத்திடு புரசைக்கும் பேர்;
**சிவை** உமை, மரவேர், கொல்லன் -
உலைமுகம், திரியும் ஓரி;
கவையே ஆயிலியம், காடு,
கவர்வழி, எள்ளிளங்காய்.

236. **சிவப்பு** என்ப சினமும், செம்மை
யுடன், சினக் குறிப்பும் முப்பேர்;
**உவப்பு** என்ப மகிழ்ச்சி, மேடு ஆம்;
**ஒழுக்கமே** வழி, ஆசாரம்;
**செவிட்டலே** அடைத்தல், கான்றல்,
நிறைதலும், ஒலியும் செப்பும்;
**துவக்கே** தோல், பிணக்கு இரண்டு ஆம்;
**சூழலே** இடம், விசாரம்.

237. **சேவலே** களவலோடு,
சேறு, புள் – ஆண் முப்பேரே;
**கேவலம்** தனிமை, முத்தி;
**கீரம்** என்பது பால், கிள்ளை;
**பூவை** சாரிகை, காயா ஆம்;
**புலி** சிங்கம், உழுவை, சாந்தே;
**வாவல்** அஞ்சலிகைப் புள்ளும்,
தாவலும் வகுக்கலாமே.

238. **கவல்** பிடர், தோள்மேல், மேடு,
துருகதக்குசை நாற்பேரே;
**கவி** மந்தி, புலவன், சுங்கன்;
**கழி** என்ப மிகுதி, காயல்;
**நவிர்** உளை, மருதயாழ், வாள்;
நாஞ்சில் எத்திரம், கலப்பை;
**கனிகையே** குடை, கொடைப்பேர்;
கடிப்பம் காதணி, பூண்செப்பு ஆம்.

239. **மா** வண்டு, பெருமை, பிண்டி,
வாகி, கூப்பிடல், வெறுத்தல்,
காவுறு விலங்கு, செல்வம்,
கருநிறம், கமலை, பத்து ஆம்;
**கோ**விழி, பசு, நீர், திக்குக்
குலிசம், விண், கிரனும், பூமி;
ஏ, உரை, சுவர்க்கம், வேந்தன்,
இரங்கல், வெற்பு, ஈரேழ் ஆமே.

240. **ஆவியே** வாலி, நாற்றம்,
ஆருயிர், புகை, மூச்சு ஐம்பேர்;
**கவிரம்** தேர், தேர்மொடு ஆம்;
**குவடு** நீள்மலை, வெற்புச்சி;
**காவியே** குவளை, காவிக்
கல்லொடு, கள்ளும் முப்பேர்;
**நாவிதன்** மஞ்சிகன், கார்த்தி –
திகை, பூரநாளும் ஆமே.

241. **ஆ** என்பது இரக்கம், பெற்றம்,
ஆச்சசாவோடு, இசை, வியப்பு ஆம்;
**கா** என்ப துலாம், பூஞ்சோலை,
காத்தல், தோட்சுமை நாற்பேரே;
**பா** என்ப பனுவல், நூற்பா,
பரவுதல், பரப்பும் ஆகும்;
**தா** என்ப பகை, வருத்தம்,
தாண்டுதல், வலி, கேடு, ஐம்பேர்.

242. **கவ்வையே** பழிச்சொல், துன்பம்,
கள், ஒலி, எள்ளிளங்காய்;
**பவ்வமே** மேழி வாரி,
பருமரக்கணு, உவா ஆம்;
**தவ்வை** முன்பிறந்தானோடு,
தாயும், மூதேவியும் பேர்,
**நவ்வியே** தோணி, மான் ஆம்;
**நன்று** என்ப பெருமை, நன்மை.

243. அவலே சிற்றுண்டி, பள்ளம்
நீர்நிலை ஆகும் முப்பேர்;
செவிலியே வளர்த்த கைத்தாய்;
முன்பிறந்தவளும் செப்பும்;
கவுடம் ஓர்கொடி, ஓர்தேசம்
இருபெயர் கழறலாமே;
கவடு வச்சிராங்கி, ஓர் எண்;
சுபம் என்பது அழகு, வெண்மை.

244. பவம் என்ப சனனம், பாவம்;
பாவம்தான் வினை, தியானம்;
சவுரியம் களவு, வீரம்;
தண்மை தான் குளிர்ச்சி, தாழ்வு;
யவம் ஒரு தானியப்பேர்,
என்ப நெல்லிற்கும் அப்பேர்;
யவனர் சோனகர், கண்ணாளர்,
சித்திரகாரர் என்ப.

245. ஆவரணம்தான் சட்டை,
தடை, மறைப்பு, அரணம், ஆடை;
ஏவலே வியங்கோள் என்ப,
எய்திய வறுமைக்கும் பேர்;
ஓவியர் சிற்பநூ லா –
ரொடு, சித்திர காரரும் பேர்;
ஓ இரக்கச்சொல், நீக்கம்,
ஒடு நீர் தகை கபாடம்.

246. **அவ்வையே** தாயின் பேரும்,
ஒளவையோடு இருபேர் ஆமே;
**செவ்வி**, ஏர், பொழுதினோடு,
செப்பிய பருவம் ஆகும்;
**தெவ்** அமர், பகை இரண்டு ஆம்;
தீவினை கொடுமை, பாவம்;
**சையம்** ஓர் புராணம், ஈசன்
சமயத்தின் விகற்பும் ஆமே.

**ழகர எதுகை**

247. **விழவு** என்ப மிதுனராசி,
விளங்கும் உற்சவமும் ஆகும்;
**கழை** என்ப புனர்தம், மூங்கில்,
கரும்பு என விரும்பும் முப்பேர்;
**கழல்** கழங்கொடு, செருப்புக்
காலணி, கால் இந்நாற்பேர்;
**கிழமை** மூப்பு, உரிமை, பண்பு ஆம்;
**கிழி**நிதிப் பொதி, நீறு ஆமே.

248. **சூழியே** சுனையும், வெய்ய
தும்பியின் முகபடாமும்;
**பாழியே** வலி, விலங்கின்
படுக்கை, ஊர், பற்றிலார் ஊர்;
**நாழியே** அளக்கும் நாழி,
நாழிகை, பூரட்டாதி;
**ஆழி** மோதிரமே, நேமி,
அலைகடல், கரையே, வட்டம்.

249. **இழுமெனல்** ஓசை என்ப,
இனிமையும் இலம்பும் அப்பேர்;
**விழுமமே** சிறப்புச், சீர்மை,
இடும்பையும் விதித்த பேரே;
**தொழு** என்பது உழலைதானே,
இரேவதி நாளும் சொல்லும்;
**செழுமையே** நாளும் கொழுப்பு ஆம்;
தேன் என்ப நறவும், வண்டும்.

250. **கழுது** பேய், பரண், வண்டு என்ப
**கயவு** கீழ், பெருமை, மென்மை;
**அழுவமே** பரப்பும், நாடும்;
**அழுங்கலே** இரங்கல், கேடு ஆம்;
**கழுமல்** பற்றொடு, மயக்கம்;
**காதலே** ஆசை, கோறல்;
**கழிதல்** என்பதுவே சாதல்,
கடந்திடல், மிகுதி முப்பேர்.

251. **மாழை** பொன், உலோகக்கட்டி,
மடமை, ஏர், புளிமா, ஓலை;
**கூழையே** சிறகு, மாதர் –
கூந்தல், வெம் படையுறுப்பு ஆம்;
**தாழை** கேதகை, தெங்கு ஆகும்;
**சாகினி** சேம்பு கீரை;
**ஊழ்** முறை, வெயில், பகைப்பேர்;
**ஊசியே** சூசி, ஆணி.

252. **உழை** என்பது இடம், மான், யாழின்
ஓர் நரம்பிற்கும் பேர் ஆம்;
**சூழை** என்ப தளிர், துவாரம்,
குண்டலம், சேறு, நாற்பேர்;
**விழைவு** என்ப புணர்ச்சி, காதல்;
**வெறுக்கை** என்பது பொன், செல்வம்;
**வழி** மரபு, இடம், பின், மார்க்கம்;
**வழங்கலே** கொடை, உலாவல்.

253. **ஈழம்**, பொன், கள், ஓர் தேசம்;
எல்லையே அளவை, வெய்யோன்;
**மேழகம்** கவசம், ஆடு ஆம்;
வேளாண்மை கொடையே, மெய்ம்மை;
**காழியர்** வண்ணார், உப்பு
வாணிகர் இருபேர் காட்டும்;
**வேழமே** கரும்பு; யானை,
கொறுக்கைச்சி, வேணு நாற்பேர்.

254. **கூழ்** என்பது உணவும், பொன்னும்
பயிர் என்றும் கூறும் முப்பேர்;
**காழ்** என்ப மணியின் கோவை,
கல், பரல், சேகு, வித்து ஆம்;
**யாழ்** என்ப மிதுனம், வீணை,
இரலைதான், ஆதிரைப்பேர்;
**கீழ்** என்பது இடம், கீழ்சாதி,
கீழ்த்திசை கயமை நாற்பேர்.

255. **கோழியே** குருகு, ஓர் ஊர் ஆம்;
**குய்யமே** மறைவு, யோனி;
**மூழியே** வாவி, சோறோடு,
அகப்பையும் மொழியும் முப்பேர்;
**மூழையே** அகப்பை, சோறு ஆம்;
**முறம்** சுளகொடு, விசாகம்;
**நூழிலே** கோறல், யானை,
நுண்கொடி, கொடிக்கொத்தான் பேர்.

256. **தொழுதி** புள்ளொலி கூட்டப்பேர்;
தொறு, நிரை, அடிமை, கூட்டம்;
**கெழுவுதல்** மயக்கம், பற்று ஆம்;
**கிலாலம்** கறை, நீர், காடி;
**குழல்** துளையுடைப் பொருள்பேர்;
மயிர், இசைக்குழல் முப்பேரே;
**அழிவு** என்ப வீதல், கேடு ஆம்;
**அவி** நெய், சோறு, அமரருண்டி.

**ளகர எதுகை**

257. **குளம்** நுதல், கரும்பின்கட்டி,
குட்டமும்இட்ட நாமம்;
**களம்** அமர்க்களமே, கண்டம்,
களா, விடம், கறுப்பே, இல்லாள்;
**வளமை** மாட்சிமை, கொழுப்பு ஆம்;
**வாருணம்** கடலும், மேற்கும்;
**விளவு** என்ப கமர், விளா ஆம்;
**விம்மல்** ஏங்குதல், ஒலித்தல்.

258. **முளரியே** விறகு, செந்தீ;

முண்டகம், சிறுமை, காடு ஆம்;

**விளர்** என்பது இளமைதானே,

வெளுப்பொடு, கொழுப்பும் ஆகும்;

**களபமே** யானைக்கன்று,

கமழ் சாந்து, கலவை முப்பேர்;

**உளர்தலே** சிதறல் ஆகும்,

தடவலும் உரைக்கற்பாற்றே.

259. **குளிர்** மழு, நண்டு, இறுத்தல்,

குளிர், கவண், முழா, மீன்தாரை;

**நளிர்** குளிர், பெருமை, ஞெண்டு;

நாட்டிய செறிவு நாற்பேர்;

**ஒளிவட்டம்**தான் கண்ணாடி,

சக்கரம் இருபேர் ஓதும்;

**இளி** இசை, இசித்தல், எல்லே,

இணங்குதல், உரித்தற்கும் பேர்.

260. **பளிதம்** என்பது கர்ப்பூரம்,

பல்லம் என் கணக்கும் ஆகும்;

**வெளில்** அணில், வேழத்தம்பம்,

வெண்தயிர் கடைதறிப் பேர்;

**களிறு** என்ப அத்த நாளே,

கறையடி, கறவு, பன்றி;

**ஒளி** இருசுடரே, தீயே,

ஒளிப்பிடம், புகழும் ஆமே.

261. **பாளிதம்** சோறு, கண்ட
சருக்கரை, குழம்பு, பட்டு ஆம்;
**ஒளியே** யானைக்கூடம்
ஒழுங்கு என்றும் வழங்கும் நூலே;
**கோளி** தொன்மரமே, அத்தி,
கொள்வோனும், கொழிஞ்சியும் பேர்;
**மீளி** திண்ணியன், வலிப் பேர்,
மேன்மகன், பெருமைக்கும் பேர்.

262. **அளை** தயிர், முழை, புற்று ஆகும்;
**அசனியே** உருமு, வச்சிரம்;
**உளை** பரிமீது சுட்டும் –
மயிர், பிறமயிரும் ஓதும்;
**கிளை** என்பது ஓர்பண், மூங்கில்,
கேளொடு, கிளைத்தலும் பேர்;
**இளை** புயல், இளமை, வேலி
தலைக்காவல் இசை நாற்பேரே.

263. **உள்ளலே** நினைவு, உள்ளான்பேர்;
**உழப்பு** என்ப வலி, உற்சாகம்;
**ஞெள்ளலே** பள்ளம், மேன்மை,
நீண்ட வீதியும் முப்பேரே;
**எள்ளலே** நகை, இழிப்பு ஆம்;
**யாமம்** தெற்கு, இரவு, சாமம்;
**ஞொள்கல்** சோம்பு, இளைத்தல், அச்சக்
குறிப்பு என்று நுவலற்பாலாம்.

264. **வள்** என்ப காது, கூர்மை,
வலி, வளம், வாரே, வாள் ஆம்;
**வெள்ளையே**, முசலி, சங்கு,
வெளிறு, வெள்ளாடு, வெண்பா;
**கள்வனே** முசு, ஞெண்டு, யானை,
கருநிறத்தவனே, சோரன்;
**பள்ளி** ஊர், சிற்றூர், கோயில்;
பாயல், கண்படை, நீத்தோரூர்.

265. **விளக்கு** ஒளி, சோதிநாள் ஆம்;
**வேள்வியே** மகம், நாள், ஈதல்;
**அளக்கரே** புடவி, சேறு, உப் –
பளம், கடல், கார்த்திகைப் பேர்;
**திளைத்தலே** அனுபவித்தல்,
செறிதலே, நிறைதல் முப்பேர்;
**இளைத்தலே** இளைப்பு, இரங்கல்;
என்றூழே இரவி, வெய்யில்.

266. **பிள்ளையே** வடுகன், காக்கை;
**பெட்டல்தான்** விரும்பல், வேண்டல்;
**மள்ளரே** மள்ளர், வீரர்,
மறவர்க்கும், குறவர்க்கும் பேர்;
**உள்ளமே** முயற்சி, நெஞ்சு ஆம்;
உளுற்று, இழுக்கொடு, தாளாண்மை;
**வள்ளியே** வல்லி, செங்கை –
வளை, புனைஇழை முப்பேரே.

267. **காளமே** ஊதுகொம்பு,
கழு, நஞ்சு, கருமை, நாற்பேர்;
**வேள்** அறுமுகன், காமன் பேர்;
**விபூதி** ஊன், கொடுமை, செல்வம்;
**கோள்** இடையூறு, ஒன்பான் கோள்,
கொலை, குணம், வலி, பொய், கொள்கை;
**ஞாளியே** சுணங்கன், கள் ஆம்;
**நான்முகன்** அருகன், வேதா.

268. **களர்** என்ப மிடறு, கோட்டி,
களர்நிலம், கருமை நாற்பேர்;
**தளம்** இலை, படையே, சாந்து,
தாழி, பூவிதழே, மேடை;
**அளகமே** மாதர் ஓதி,
அறல், மயிர்க்குழற்சி முப்பேர்;
**தளை** விலங்கொடு, தொடர்ச்சி,
தாட்சிலம்பு, ஆண்மயிர்ப் பேர்.

269. **புள்ளு** வண்டு, அவிட்டம், புட்பேர்;
**புளகம்** தர்ப்பணம், குமிழ்ப்பு ஆம்;
**கள்** என்ப களவு, கள் ஆம்;
**கனலி** தீ, இரவி, பன்றி;
**அள்** உரம், செறிவு, காதோடு
அயிலும், பற்றிரும்பும் ஆகும்;
**வெள்ளம்** எண் மிகுதி முந்நீர்;
**வேணுவே** மூங்கில், வில், வாள்.

270. வான் என்பது ஒளி, கட்கப் பேர்;
**வல்லரி** தளிர், பைங்காய் ஆம்;
**கூளி** பேய், தமர், ஏறு, ஆசு,
குறள், படைத்தலைவன், கூட்டம்;
**தோள்** என்ப புயம், கை ஆகும்;
**சுந்தரி** உமையே, சுண்டன்;
**தேள்** என்பது அனுட நாளே,
விருச்சிகம், தெறுக்காலும் பேர்.

271. **அளி** என்ப நறவும், வண்டும்,
அன்பொடு, கொடையும் நாற்பேர்;
**அளவையே** எல்லை, நாள் ஆம்;
**ஆசாரம்** துகில், தூ, மாரி;
**விளரியே** இளமை, யாழில்
ஓர் நரம்பு, யாழ், நீள்வேட்கை;
**வளம்** என்ப பதவியும், பல்
பண்டமும், வனப்பும் ஆகும்.

272. **வள்ளமே** மரக்கால், வட்டில்,
கடிகை வட்டிற்கும் அப்பேர்;
**வள்ளூரம்** பசுவிறைச்சி,
வரைந்த ஊன் பொதுவும் ஆகும்,
**அள்ளலே** நரகம், சேறு ஆம்;
**அம்பு** நீர், புயல், வேய், ஏ ஆம்;
**வெள்ளிலே** விளாப், பாடைப்போர்;
**வேலன்** வேள், வெறியாட்டாளன்.

273. காளையே எருது, பாலைக்கு –
அதிபன், நல்இளமையோன் பேர்;
கூளியர் நண்பர், பூத –
கணம்வீரர், கொலைத்திறத்தோர்;
கோளகை வட்டமோடு,
மண்டலிப் பாம்பும் கூறும்;
கேள்வியே செவி, கல்விப் பேர்;
கிடங்கு அகழ், வாவி ஆமே.

274. இளமையே தண்மை, காமம்,
இளமையின் பருவம் முப்பேர்;
அளறு என்ப நரகம், சேறு ஆம்;
அக்காரம் புடவை, வெல்லம்;
கிளர் என்ப கிரணத்தோடு
கிளர், கோட்டு மலர்ப்பூந்தாது ஆம்;
களரி போர்க்களம், காடு என்ப,
கருமம் செய் இடமும் ஆமே.

### றகர எதுகை

275. இறைவையே புட்டில், ஏணி
என்ப; கூர் மிகுதி, கூர்மை;
குறடு என்ப பலகை, திண்ணை;
கொண்மூ என்பது விண் மேகம்;
புறவம் ஓர் புள்ளும், காடும்,
முல்லை நன்னிலனும் போற்றும்;
புறணியே குறிஞ்சி, முல்லை
நிலத்தொடு, புறமும், தோலும்.

276. **மறம்** சினம், பிணக்கு கூற்று ஆம்,
மலைந்த சேவகமும் ஆகும்;
**குறிஞ்சி** ஓர் இசை, ஓர் பண்ணே,
குறிஞ்சி, செம்முள்ளிக்கும் பேர்;
**பிறங்கலே** மிகுதி, வெற்பு,
நிறைவு, ஒலி, பெருமை ஐம்பேர்;
**குறும்பொறை** குன்று, காடு,
குறிஞ்சி நன்னிலத்தூ முப்பேர்.

277. **தாறு** விற்குதையே, எல்லை,
தாழ் மரக்குலை, முட்கோல் ஆம்;
**சேறு** என்ப கும்பி, சாரம்,
தித்திப்பு, விழவு, கள்ளே;
**ஊறு** என்ப தீமை, தீண்டல்,
உயிர்க்கொலை, இடையூறு என்ப;
**ஏறு** இடி, முதல்நாள் ஆகும்,
இடபமோடு, எருதும் அப்பேர்.

278. **சிறையே** வேறிடம், ஆம் புள்ளின்
சிறகொடு, காவலும் பேர்;
**கறை** இறுத்திடல், இரத்தம்,
கறுப்பு, உரல், விடம் பேர் ஐந்தே;
**முறை** என்ப கோசமே, ஊழ்,
முறைமை இம்முப்போர் என்ப;
**பிறழ்தலே** நடுக்கம், வேறு –
பெயர்தலோடு, ஒளிவிடல் பேர்.

279. **ஏற்றலே** கோடல் என்ப,
எதிர்ந்து போர் செய்தலும் பேர்;
**ஆற்றலே** பொறை, முயற்சி,
அதிகமே, விலயே, ''ானம்;
**தோற்றலே** வலி, பறப்புத்,
தோன்றுதல், புகழே நாற்பேர்;
**போற்றலே** புகழ்தல், ஓம்பல்;
புறம் என்ப முதுகு, வீரம்.

280. **அற்றமே** மறைவும், சோர்வும்,
அவகாசம் தானும் ஆகும்;
**குற்றல்** குற்றுதல், பறித்தல்;
**குரை** என்பது இடைச்சொல், ஓசை;
**ஏற்று** என்பது இரக்கம், மொத்தல்,
எறிதல், எத்தன்மைத்து என்றல்;
**கொற்றியே** துர்க்கை நாமம்,
கோவிளங்கன்றும் கூறும்.

281. **உறழ்வு** என்ப புணர்வு, காலம்,
செறிவு, இடையீடு, ஒப்பு ஐம்பேர்;
**உறவியே** எறும்பு, நீரூற்று,
உலைக்களம், உறவு, உயிர்ப்பேர்;
**உறுகண்** என்பதுவே துன்பம்,
உறுபயம், மிடி, நோய், நாற்பேர்;
**உறவனே** முனி, புத்தன் பேர்;
**உலக்கையே** உரோங்கல், ஓணம்.

282. **விறப்பு** என்ப செறிவு, வெற்றி,
வெருவுதல், பொருதல், நாற்பேர்;
**பொறுத்தலே** பொறை, தாங்கல் பேர்;
புந்திதான் புதனே, புத்தி;
**இறுத்தலே** ஒடித்தல், தங்கல்,
இயம்புதல் முப்பேர் என்ப;
**கறுப்பு** இருள், சினக்குறிப்பு ஆம்;
கன்று கைவளை, கன்று ஆமே.

283. **பொறி** மரக்கலமே, செல்வம்,
பூமகள், எந்திரங்கள்,
அறிவு, இலாஞ்சனை, எழுத்தோடு,
ஐம்பொறி, வரி, ஒன்பான்பேர்;
**வெறி** வெருவுதல், கலக்கம்,
வெறியாட்டு, வட்டம், சாற்றம்,
குறியே பேய், துருவை, கள்ளு,
கூறும் நோய் ஒன்பது ஆமே.

284. **உறை** பொருள், மருந்து, வாழ்நாள்,
உணவு, வெண்கலமே, காரம்,
எறிபடைக்கலத்தின் கூடே,
எண்குறித்து இறுதிபெய்தல்,
நறிய பாற்பிரை, இடைச்சொல்,
நகரம், நீர்த்துளி ஈராறு ஆம்;
**அறை** முழை, மோதல், பாறை,
திரை, சிற்றில், மொழி ஆறு ஆமே.

285. **இறை** சிவன், கடன், வேந்தன், சை –
யிறை, இறுப்பு, இறை, சிறந்தோன்,
சிறுமை, புள்ளிறகு, தங்கல்,
சென்னி, கூன், இறப்பு, ஈராறே;
**உறையுள்** என்பது நாடு, ஊர் ஆம்;
**உறுதியே** நன்மை, கல்வி;
**பொறை** மலை, துறுகல், பாரம்,
பொறை, சுமை, கருப்பம், பூமி.

286. **இறும்பி** தாமரையின் பூவே,
மலை, குறுங்காடும் ஏற்கும்;
**இறும்பூது** தகைமை, வெற்போடு,
அதிசயம், குழை, தூறு என்று ஆம்;
**கறங்கவே** சுழலல், ஓசை;
**கதிர்** என்பது இரவி, சோதி;
**பறம்பு** உயர்மலை, முலைப்பேர்;
**பாய்மானே** குதிரை, வேங்கை.

287. **கூற்று** என்பது இயமன், சொல் ஆம்;
**கோமானே** மூத்தோன், பன்றி;
**நாற்றம்** நாறுதல், தோன்றல் பேர்;
**நனவு** என்பது அகலம், தேற்றம்;
**ஊற்று** என்பது ஊன்றுகோலும்,
உறவியும் இருபேர் ஓதும்;
**நோற்றலே** பொறை, தவப்பேர்;
**நுணங்கு** என்ப நுண்மை, தேமல்.

288. **கற்பமே** பிரமன் வாழ்நாள்;
கற்பகதரு, சுவர்க்கம்;
**பொற்பு** என்பது அழகினோடு,
பொலிவும், ஒப்பனையும் ஆகும்;
**பற்பமே** பதமும், தூள்ஆம்;
பழங்கணே துன்பம், ஓசை;
உற்கை தாரகை, தீக்கொள்ளி;
**உண்டி** தான் புசித்தல், சோறே.

289. **முற்றல்** காழ்கோடல், மூப்பு,
முடிவுடன் வளைத்தல் நாற்பேர்;
**நெற்றியே** நுதலின் பேரும்,
நெடும்படையுறுப்பும் ஆகும்;
**கொற்றமே** வன்மை, வெற்றி,
கோ – அரசியல் முப்பேரே;
**எற்றுதல்** புடைத்த லோடே,
எறிதலும் இருபேர் ஆமே.

290. **அறுகு** என்ப சிங்கம், ஓர்புல்,
யாளியும் ஆகும் முப்பேர்;
**வறிது** என்பது அருகவே, சற்று,
அறியாமை, பயினல்வார்த்தை;
**மறலியே** மயக்கம், கூற்று ஆம்;
**மறவி** கள், மறதி, ஈனம்;
**குறள்** என்ப குறளும், பேயும்;
குறுமையும் கூறும் முப்பேர்.

291. **விறல்** என்ப வலி, வென்றிப் பேர்;

**விழைந்தோனே** நண்பன், வேட்டோள்;

**நொறில்** என்ப விரைவினோடு,

நுடக்கமும் இருபேர் ஆமே;

**நெறி**வழி, நீதி என்ப;

**நிருமித்தல்** படைப்பு, ஆராய்தல்;

**பறை** பறை, வசனத்தோடு,

பறக்கும் புள்ளிறகும் முப்பேர்.

**னகர எதுகை**

292. **மனவு** நன்மணி, சங்கு, அக்கு ஆம்;

**வரை** மலை, இறை, வேய், மட்டு ஆம்;

**தனி**, தம, ஒப்பின்மைப் பேர்;

**சாந்தமே** சுமையும், சாந்தும்;

**முனை** பகை, நுனி, வெறுப்பு ஆம்;

**முளை** வேய், அய்குரமே, பிள்ளை;

**இனம்** இருங்கிளை, அமைச்சு ஆம்;

**எழில்** வண்ணம், இளமைக்கும் பேர்.

293. **ஆனகம்** படகத்தின் பேர்

ஆகும், துந்துபியும் அப்பேர்;

**மானமே** அளவு, இலச்சை,

விமானமே, பெருமை, குற்றம்;

**பானலே** பழனம், நெய்தல்;

**பாங்கரே** இடம், பக்கப்பேர்;

**மானலே** மயக்கம், ஒப்பு ஆம்;

வருடமே மழையும், ஆண்டும்.

294. **தானமே** மதம், நீராட்டுத்,
தரு கொடை, சுவர்க்கம் நாற்பேர்;
**பீனமே** பருமை, பாசி;
பேடு என்ப பேடி, ஊரே;
**நானமே** பூசும் பூச்சு,
நானமும், குளிக்கும் நீரும்;
**வானம்** ஆகாயம் என்ப,
மழை, உலர்மரமும் ஆமே.

295. **வானி** மேற்கட்டி, சேனை
வண் துகிற் கொடி முப்பேரே;
**ஆனி** உத்தராடம், மூலம்;
சேதம், ஓர் மாதம் என்ப:
**ஏனையே** ஒழியும், மற்றை
எனும் இடைச்சொற்கும் அப்பேர்;
**ஆனி**யம் பொழுது, நாள் ஆம்;
**அனந்தை** ஓர் சத்தி, பூமி.

296. **முன்னலே** நினைவு, நெஞ்சு ஆம்;
முன்னம் சீக்கிரியோடு, எண்ணம்;
**கன்னல்** சர்க்கரை, கரும்பு,
கரகம், நாழிகை, வட்டில் பேர்;
**மன்னன்** உத்தரட்டாதிப் பேர்;
மன்னவன் தானும் ஆகும்;
**கன்ன**ரம் நீர்ப்புள், யாழ் ஆம்;
கிடக்கை பூதலம், பாயல் பேர்.

297. **பின்னையே** பின்றை, தங்கை,
பெரிய மாற்கு உரிய தேவி,
**கொன்** பயனிலாமை, காலம்,
கூறிய பெருமை, அச்சம்;
**பொன்** என்ப வனப்பு, இரும்பு
பூமகள், வியாழன், நாற்பேர்;
**மன்** நிலை, மிகுதி, வேந்தே;
வாழி வாழ்கெனல், இடைச்சொல்.

298. **வன்னியே** பிரமசாரி,
வளர்கிளி, சமி செந்தீ ஆம்
**சென்னி கம்**, காணன், தோழன்;
சீருள் ஈயம், செம்பு ஆகும்;
**கன்னி** பெண், அழிவிலாமை,
கட்டிளமைக்கும் பேரே;
**தென்இசை**, வனப்புத், தாழை,
தெற்கொடு, கற்பும் ஆமே.

299. **குன்று** வேதண்டம் ஆகும்,
குறைவொடு, சதயம் முப்பேர்;
**அன்றில்** ஓர் புள்ளும், மூல
நாள் என ஆம் இரண்டே;
**மன்றமே** வெளியின் நாமம்,
வாசம், அம்பலமும் அப்பேர்;
**மன்றலே** பரிமளப்பேர்,
மருவு கல்யாணமும் பேர்.

300. **தனம்** முலை, பொன், ஆன்கன்று,
சந்தம், முத்தனம் ஐம்பேர் ஆம்;
**கனவு** நித்திரை, மையல் பேர்;
**கலிங்கம்** சாதகப்புள், ஆடை;
**கனை** செறிவு, ஒலி ஆம் என்ப;
கவரியே சவரி, மேதி;
**பனுவலே** கிளவி, நூல் ஆம்;
படப்பை ஊர்ப்புறமே, தோட்டம்.

301. **ஆனந்தனே** சிவன், மால், சேடன்,
அலாயுதன், அருகன் ஐந்தே;
**அனந்தமே** முடிவிலாமை,
ஆடகம், விண்முப்பேரே;
**அனங்கமே** இருவாட்சிப் பேர்;
ஆகும் மல்லிகைக்கும் அப்பேர்;
**தனஞ்சயன்** பார்த்தனே, செந்
தழல், ஒரு காற்றும் ஆமே.

302. **சானகி** சீதை, மூங்கில்;
**தனு** என்பது உடல், வில், அற்பம்;
**சானுவே** மலை, முழந்தாள்,
மலைப்பக்கம் தானும் ஆகும்ட்
**சோனையே** ஓண நாளும்,
விடாமழை சொரிதலும் பேர்;
**கானலே** மலைச்சார் சோலை,
கடற்கரைச் சோலை, பேய்த்தேர்.

303. **வான்** என்ப விசும்பு, மேகம்,
மழையொடு, பெருமை நாற்பேர்;
**தானையே** சேனை, ஆடை,
படைக்கலம் தானும் ஆகும்;
**கானம்** தேர், இசையே, பேதை,
காடு, தள்பாடி, ஐம்பேர்;
**ஏனமே** செந்திணைப் பேர்;
திணைப்புனம் என்றும் ஆமே.

304. **முனி** என்பது யானைக்கன்று,
முனிவன், வில், அகத்தி நாற்பேர்;
**துனி** என்ப புலவி நீட்டம்,
துன்பம், நோய், ஆறு, கோபம்;
**பனி** என்ப நடுக்கம், துன்பம்,
பயம், குளிர், இமம் ஐம்பேரே;
**சினை** என்ப முட்டை, பீள் ஆம்,
மரக்கொம்பும் செப்பும் அப்பேர்.

305. **மானே** சாரங்கம், மாவின்
பொதுவொடு, மகரராசி;
**கானே** நல் மணம், காடு என்ப;
**கல்லி** ஊர்க்குருவி, யாமை;
**ஏனாதி** மஞ்சிகன், மந் –
திரியும், தந்திரியும் என்ப;
**மீனே** சித்திரைநாள், வான்மீன்;
மயிலையும் மேவும் அப்பேர்.

306. **ஞானமே** அறிவு, கல்வி,
நல்ல தத்துவநூல் முப்பேர்;
**யானமே** மரக்கலத்தோடு,
எழில் ஊர்திவிகற்பு இரண்டு ஆம்;
**ஏனம்** ஒலைக்குடைப் பேர்,
எறுழியும், மறமும் அப்பேர்;
**மேனி**யே வடிவம் என்ப,
நிறத்தையும் விளம்பலாமே.

307. **அன்னையே** முன்பிறந்தாள்,
தோழி, தாய் ஆகும் என்ப;
**அன்னம்** ஒதிமமே, சோறு ஆம்;
ஆகாரம் உடல், நெய், உண்டி;
**தன்மை** ஏர், இயல்பினோடு,
தன்மையில் இடமும் சாற்றும்;
**பன்னலே** நெருக்கம், வார்த்தை,
பருத்தியின் பேரும் ஆமே.

308. **வனமே** நீர், மிகுதி, காடு,
வளர் சோலை, துளவி, ஈமம்;
**மனுவே** மந்திரம், ஓர் நூல் ஆழ்;
மண்ணை பேய் இளமை, மூடன்;
**பனை** என்பது அழகினோடு,
பொலிவும், ஒப்பனையும் ஆகும்;
**மனை** என்ப மனைவி, வீடு ஆம்;
வதுவையே மணம், கல்யாணம்.

309. அன் வினையொடு பெயர்க்கும்
விகுதி, சாரியையும் ஆகும்;
மன்னிடும் **கனைத்தல்** என்பது
இருள்; ஓசை இருபேர் வைக்கும்;
இன்னன ஒருசொல் பல்பேர்க்கு
இயற்கவி முந்நூற்றொன்பான்
சொன்னவன் குணபத்திரன் தாள்
சூடும் மண்டலவன் தானே.

# ஒரு சொற் பலபொருள் விளக்கம்
# அகராதி

| சொல் | பொருள் | விளக்கம் | |
|---|---|---|---|
| அகடு10 | நடு | மத்தி | |
| | குக்கி | வயிறு | (2) |
| அகப்பா 115 | புரிசை | மதில் | |
| | மேடை | மதிலுண்மேடை | (2) |
| அகம் 1 | மனம் | மனது (மனம்) | |
| | மனை | வீடு | |
| | பாவம் | பாதகம் | |
| | அகலிடம் | பூமி | |
| | உள் | அகணி | (5) |
| அகலம் 183 | மார்பு | உரம் | |
| | விசாலம் | விரிவு | (2) |
| அகலுள் 182 | பரப்பு | விசாலம் (அகலம்) | |
| | ஊர் | கிராமம் | |
| | நாடு | தேயம் | (3) |
| அகவல் 16 | பா | அகவற்பா (ஆசிரியப்பா) | |
| | மயிற்குரல் | மயிலொலி | |
| | கூத்து | நடனம் (ஆடல்) | (3) |
| அகளம் 183 | மிடா | பானை | |
| | தாழி | சாடி | (2) |
| அகி 16 | அரவு | பாம்பு | |
| | இரும்பு | கரும்பொன் | (2) |

| | | | |
|---|---|---|---|
| அகைத்தல் 7 | வேதனை | வருத்தம் | |
| | ஒடித்தல் | ஒசித்தல் (முறித்தல்) | |
| | அறுத்திடல் | கொய்தல் (அறுத்தல்) | |
| | உயர்த்தல் | நிமிர்தல் | (4) |
| அக்காரம் 274 | புடவை | சேலை | |
| | செல்லம் | குளம் | (2) |
| அக்கு 17 | எலும்பு | | |
| | விடை முரிப்பு | எருதின் முரிப்பு | |
| | | இடபத்தின் முரிப்பு | |
| | சங்குமணி | அக்குமணி | (3) |
| அங்கணம் 21 | சேறு | கும்பி | |
| | முற்றம் | முன்றில் | |
| | சலதாரை | தூம்பு | (3) |
| அங்கதம் 23 | பின்னகம் | பாம்பு | |
| | தோளணி | வாகுவலயம் | |
| | வசைச்சொல் | பழிச்சொல் | (3) |
| அங்கம் 24 | உடல் | உடம்பு | |
| | உறுப்பு | அவயவம் | |
| | என்பு | எலும்பு | |
| | ஆறங்கம் | வேதாங்கம் | |
| | கட்டில் | மஞ்சம் | (5) |
| அங்காரகன் 131 | தீ | நெருப்பு | |
| | செவ்வாய் | குசன் | (2) |
| அங்கி 96 | தீ | அக்கினி (நெருப்பு) | |
| | சட்டை | கஞ்சுகம் | (2) |
| அசம் 33 | மூவாண்குறுநெல் | மூன்றுவருடத்துநெல் | |
| | ஆடு | புருவை | (2) |
| அசனி 262 | உரும் | இடி | |
| | வச்சிரம் | வச்சிராயுதம் | (2) |
| அசி 27 | படைக்கலம் | ஆயுதம் | |
| | வாள் | கட்கம் | |
| | அவமதிச்சிரிப்பு | ஆசியம் | (3) |

| | | | |
|---|---|---|---|
| அச்சம் 30 | அகத்தி | அகத்திமரம் | |
| | ஐம்மை | அச்சவடிவு (தகட்டுவடிவு) | |
| | அஞ்சல் | பயம் | (3) |
| அஞர் 71 | அறிவிலர் | மூடர் | |
| | துக்கம் | துயரம் | (2) |
| அஞ்சலி 40 | வணங்கல் | கும்பிடல் | |
| | வாவற்பறவை | வெளவால் | (2) |
| அஞ்சனம் 40 | கறுப்பு | கறுப்புநிறம் | |
| | மை | கண்ணிலிடுகின்றமை | |
| | திக்கானையிலொன்று | மேற்றிசையானை | (3) |
| அடர் 72 | நெருங்குதல் | நெருங்கல் | |
| அடல் 58 | கொலை | கொல்லுதல் | |
| | வலி | பராக்கிரமம் | |
| | போர் | யுத்தம் | (3) |
| அடி 72 | செண்டுவெளி | குதிரைவையாளிவீதி | |
| | தாள் | கால் | |
| | ஆதி | முதல் | |
| | கவிதையின்பாதம் | பாட்டினடி | (4) |
| அடுதல் 69 | அட்டல் | சமைத்தல் | |
| | அடர்தல் | நெருங்கல் | |
| | கொலை | கொல்லுதல் | (3) |
| அடுப்பு 54 | பரணிநாள் | பரணிநக்ஷத்திரம் | |
| | அச்சம் | பயம் | |
| | சுல்லி | சுபாலிகை | (3) |
| அடை | இலை | தமாலம் | |
| | கனம் | பாரம் | |
| | அப்பம் | அப்பவர்க்கம் | |
| | அடுத்தல் | நெருங்கல் | |
| | செல்வழி | போகுமார்க்கம் | (5) |

| | | | |
|---|---|---|---|
| அணங்கு 84 | நோய் | வியாதி | |
| | அழகு | அந்தம் | |
| | தெய்வம் | கடவுள் | |
| | ஆசை | இச்சை | |
| | பெண் | தையல் | |
| | கொலை | கொல்லுதல் | |
| | வருத்தம் | பிரயாசை | (7) |
| அணவல் 125 | அணுகல் | அடைதல் | |
| | புல்லல் | புணர்தல் | (2) |
| அணி 131 | படைவகுப்பு | சேனைவகுப்பு | |
| | அணி | ஆபரணம் | (2) |
| அணு 183 | உயிர் | சீவன் | |
| | நுண்மை | நுட்பம் | (2) |
| அணை 33 | கரை | விளிம்பு (செய்கரை) | |
| | மெத்தை | தளிமம் | (2) |
| அணட்சம் 92 | முதலை | கரா | |
| | ஓந்தி | ஓணான் | |
| | அரணை | அரணை என்னுஞ்செந்து | |
| | புள் | பறவை | |
| | உடும்பு | முசுலிகை | |
| | பல்லி | கெவுளி | |
| | நண்டு | ஞெண்டு | |
| | மீன் | மச்சம் | |
| | தவளை | மண்டூகம் | |
| | ஆமை | கூர்மம் | |
| | நாகம் | பாம்பு | |
| | இப்பி | சிப்பி | (12) |
| அண்டம் 79 | ஆகாயம் | ஆகாசம் | |
| | முட்டை | அண்டம் | (2) |
| அண்டர் 80 | பகைவர் | சத்துருக்கள் | |
| | வானோரர் | தேவர் | |
| | ஆயர் | இடையர் | (3) |

| | | | |
|---|---|---|---|
| அண்ணல் 144 | தலைவன் | அரசன் | |
| | பீடு | பெருமை | (2) |
| அதம் 121 | இறங்குதல் | தாழ்தல் | |
| | பாதாளம் | பாதலம் | |
| | கீழ் | பள்ளம் | (3) |
| அதர் 120 | வழி | பாதை | |
| | புழுதி | பொடி | |
| | ஆட்டினதர் | ஆட்டின் கழுத்திற் றொங்கும் அதர் | |
| | நுண்மணல் | சிறுமணல் | (4) |
| அதிர்ப்பு 115 | ஒலி | சத்தம் | |
| | நடுக்கம் | கம்பிதம் | (2) |
| அத்தம் 104 | பொன் | கனகம் | |
| | பாதி | அரை | |
| | கை | கரம் | |
| | கண்ணாடி | உருவங்காட்டி | |
| | சொற்பொருள் | சொல்லினருத்தம் | |
| | காடு | வனம் | |
| | ஓர்நாள் | அத்தநட்சத்திரம் | (7) |
| அத்தன் 118 | மூத்தோன் | தமையன் | |
| | தந்தை | பிதா | |
| | அரன் | சிவன் | |
| | குரு | ஆசான் | (4) |
| அத்தி 107 | ஆர்கலி | கடல் | |
| | யானை | குஞ்சரம் | |
| | அதவு | அத்திமரம் | |
| | எலும்பு | என்பு | (4) |
| அத்திரி 116 | கழுதை | வேசரி | |
| | விண் | ஆகாயம் | |
| | ஒட்டகம் | தாசோகம் | |
| | பரி | குதிரை | |
| | அசலம் | மலை | |
| | அம்பு | பாணம் | (6) |

| | | | |
|---|---|---|---|
| அத்து 105 | அரைஞாண் | அரைநாண் | |
| | செம்மை | சிவப்பு | |
| | அசைச்சொல் | ஓரிடைச்சொல் | |
| | இசைப்பு | சேர்க்கை | (4) |
| அந்தகன் 131 | குருடன் | அதரிசனன் | |
| | கூற்று | நமன் | (2) |
| அந்தணர் 131 | அறவோர் | முநிவர் | |
| | பார்ப்பார் | வேதியர் | (2) |
| அந்தம் 16 | அழகு | அணி | |
| | ஈறு | முடிவு | (2) |
| அந்தரம் 128 | முடிவு | ஈறு | |
| | பேதம் | வேறுபாடு | |
| | அண்டம் | ஆகாயம் | |
| | இடை | (இடம் கண்) | (4) |
| அந்தரி 32 | உமை | பார்வதி | |
| | துர்க்கை | காளி | (2) |
| அந்தி 130 | முச்சந்தி | முத்தெருக்கூடுமிடம் | |
| | பாலையாழிசை | பாலைநிலத்து வீணையின் இராகம் | |
| | இரவு | இராத்திரி | |
| | மாலை | அந்திப்பொழுது | (4) |
| அந்தில் 125 | அசை | அசைச்சொல் | |
| | ஆங்கு | அவ்விடம் | (2) |
| அமரர் 147 | விபுதல் | தேவர் | |
| | தெவ்வர் | பகைஞர் | (2) |
| அமலை 147 | ஆரவாரம் | ஒலி | |
| | அயிணி | சோறு | |
| | உமை | பார்வதி | (3) |
| அமுதம் 174 | சதை | அமிர்தம் | |
| | நீர் | ஜலம் | |
| | மோக்கம் | முத்தி | (3) |

| | | | |
|---|---|---|---|
| அமுது 147 | பால் | அமிழ்தம் | |
| | தேவருண்டி | தேவருணவு | |
| | சுதை | அமிர்தம் | (3) |
| அம் 140 | அழகு | வனப்பு | |
| | அசைச்சொல் | ஓரிடைச்சொல் | |
| | நீர் | புனல் | (3) |
| அம்பணம் 181 | தோணி | படகு | |
| | (ஆமை)யாமை | கூர்மம் | (2) |
| அம்பரம் 144 | கடல் | சமுத்திரம் | |
| | விண் | ஆகாயம் | |
| | தூது | ஆடை | (3) |
| அமறல் 143 | பொலிவு | பொலிதல் | |
| | துன்னல் | நெருங்கல் | (2) |
| அம்பல் 145 | பழிச்சொல் | வசைச்சொல் | |
| | அலர்தூற்றல் | பழிகூறல் | (2) |
| அம்பி 167 | நாவாய் | கம்பல் | |
| | தெப்பம் | கட்டுமரம் | (2) |
| அம்பு 272 | நீர் | ஜலம் | |
| | புயல் | மேகம் | |
| | வேய் | மூங்கில் | |
| | ஏவு | கணை | (4) |
| அம்மை 139 | வருபிறப்பு | மறுமை | |
| | அழகு | அலங்காரம் | |
| | தாய் | அன்னை | (3) |
| அயம் 153 | நீர் | உதகம் | |
| | தடாகம் | குளம் | |
| | ஆடு | அசம் | |
| | பரி | குதிரை | |
| | இரும்பு | கருந்தாது | (5) |
| அயனம் 153 | வழி | பாதை | |
| | ஆண்டினில்பாதி | வருடப்பாதி | (2) |

| | | | |
|---|---|---|---|
| அயிராணி 148 | உமை | பார்வதி | |
| | இந்திராணி | புலாமசை | (2) |
| அயிர் 163 | கரும்பின் கட்டி | வெல்லம் | |
| | நுண்மணல் | சிறுமணல் | |
| | நுண்மை | நுட்பம் | (3) |
| அயில் 79 | வேல் | வேலாயுதம் | |
| | கூர்மை | கூர் | (2) |
| அரக்கு 200 | மெழுகு | சிவந்தமெழுகு | |
| | கள்ளின்விகற்பம் | மது விகற்பம் | |
| | சிவப்பு | ஓர்நிறம் | (3) |
| அரங்கம் 201 | ஆற்றிடைக்குறை | ஆற்றின்மத்தியிலிருக்கிறதிட்டு | |
| | ஆடிடம் | நாடகசாலை | |
| | சபை | சங்கம் | (3) |
| அரங்கு 201 | போரிடம் | போர்க்களம் | |
| | வட்டாடுமிடம் | சூதாடுதற்கு வகுத்தஅறை | |
| | சபை | சவை | |
| | மனைவிகற்பம் | மனையின் விகற்பம் | (4) |
| அரசன் 181 | வியாழன் | தேவகுரு | |
| | மன் | நிருபன் | (2) |
| அரசு 167 | மன் | அரசன் | |
| | இராச்சியம் | அரசனாகுமிடம் | (2) |
| அரணம் 165 | கவசம் | ஜீரா | |
| | காடு | வனம் | |
| | மதில் | புரிசை | |
| | வேலி | அத்து | (4) |
| அரத்தம் 176 | இரத்தம் | உதிரம் | |
| | செம்மை | சிவப்பு | |
| | அரக்கு | அரத்தம் | |

| | | | |
|---|---|---|---|
| | உற்பலம் | செங்குவளை | |
| | கடம்பு | கடப்பமரம் | (5) |
| அரந்தை 201 | குறிஞ்சியாழிசை | குறிஞ்சி நிலத்து வீணையினிசை | |
| | துன்பம் | துயரம் | (2) |
| அரம்பை 168 | தெய்வப்பெண் | அமரர் மாது | |
| | வாழை | கதலி | (2) |
| அரலை 198 | கனிவித்து | பழத்தின் கொட்டை | |
| | ஆழி | கடல் | |
| | மரல் | ஒருவிதைப்பூண்டு | |
| | கழலை | கழலைக்கட்டி | (4) |
| அரவம் 167 | நூபுரம் | காற்சிலம்பு | |
| | பாம்பு | சர்ப்பம் | |
| | ஓசை | சத்தம் | (3) |
| அரற்றல் 200 | அழுகை | அழுதல் | |
| | ஓசை | சத்தம் | (2) |
| அராகம் 205 | செந்நிறம் | சிவப்புநிறம் | |
| | பாலையாழ் | பாலைநிலத்துவீணை | |
| | முடுகியல் | வண்ணம் | |
| | பாட்டு | இசைப்பாட்டு | |
| | ஆசை | விருப்பம் | (5) |
| அரி 197 | கிளி | கிள்ளை | |
| | புணரி | கடல் | |
| | மால் | விட்டுணு | |
| | தேர் | இரதம் | |
| | ஐம்மை | அச்சவடிவு | |
| | இந்திரன் | தேவேந்திரன் | |
| | கால் | காற்று | |
| | காந்தி | ஒளி | |
| | பரி | குதிரை | |
| | புகர் | குற்றம் | |
| | பன்றி | வராகம் | |

| | | |
|---|---|---|
| | சிங்கம் | கோளரி |
| | பகை | விரோதம் |
| | புகை | தூமம் |
| | பாயல் | மக்கட்படுக்கை |
| | சோலை | தோப்பு |
| | வரி | நீளம் |
| | மதி | சந்திரன் |
| | சேகு | மரவயிரம் |
| | தேரை | தவளை |
| | வானரம் | குரங்கு |
| | இயமன் | நமன் |
| | மூங்கில் | வேய் |
| | எரி | நெருப்பு |
| | புரை | உட்டுளை |
| | நிறம் | காந்தி |
| | பொன் | கனகம் |
| | பாந்தள் | பாம்பு |
| | இரவி | சூரியன் |
| | கண்வரி | அரி |
| | தார் | பூமாலை |
| | பச்சை | மரகதம் |
| | அரிசி | தண்குலம் |
| | நெற்கதிர் | நெல்லின்கதிர் |
| | கள் | மது |
| | கூர்மை | வள் |
| | அளி | வண்டு |
| | படைக்கலம் | ஆயுதம் |
| | ஈர்வாள் | இரம்பம் |
| | அரிதல் | அறுத்தல் |
| | சயனம் | கட்டில் |
| | நேமி | கடல் |
| | அடல் | வலி |
| | விசி | கட்டு |
| | பறை | வர்ச்சியம் |
| | அரித்தல் | அரிப்பு |
| | பரிமரமதனுள் பெய்தபரல் | சிலம்பினுட் படுக்கைக்கல் (47) |
| அரிட்டம் 16 | கள் | மது |
| | காக்கை | வாயசம் (2) |

| | | | |
|---|---|---|---|
| அரிதம் 197 | பசுமை | பசியநிறம் | |
| | திக்கு | திசை | (2) |
| அரில் 143 | தூறு | சிறுதூறு | |
| | பிணக்கம் | பிணங்கல் | |
| | மாசு | குற்றம் | (3) |
| அருகல் 174 | சுருங்கல் | குறைதல் | |
| | சார்தல் | அண்ணுதல் | (2) |
| அருச்சுனம் 200 | மருதம் | மருதமரம் | |
| | வெண்மை | வெளுப்பு | (2) |
| அருணம் 174 | மான் | உழை | |
| | செம்மை | சிவப்பு | |
| | ஆடு | அயம் | |
| | எலுமிச்சை | இலிகுசம் | (4) |
| அருணன் 179 | சூரியன் தேர்ப்பாகன் | சூரியன் இரசாரதி | |
| | ஆதித்தன் | சூரியன் | |
| | புதன் | சௌமியன் | (3) |
| அருத்தம் 58 | பொருள் | சொற்பொருள் | |
| | பொன் | ஆடகம் | |
| | பாதி | அரை | (3) |
| அருந்தல் 201 | அருமை | அரியதன்மை | |
| | உண்டல் | புசித்தல் | (2) |
| அருப்பம் 188 | ஆரிடம் | வழுக்குநிலம் | |
| | நோய் | வியாதி | |
| | காடு | ககனம் | |
| | அரண் | கோட்டை | |
| | ஊர் | மருநநிலத்தூர் | (5) |
| அருவி 198 | மலைச்சார்வு ஆறு | மலையைச் சார்ந்த ஆறு | |
| | தினைத்தாள் | தினைத்திட்டு | (2) |
| அருள் 10 | கருணை | கிருபை | |
| | சத்தி | பார்வதி | (2) |

| | | | |
|---|---|---|---|
| அலகு 206 | நெற்கதிரேயாதி | நெற்கதிர்முதலியவை | |
| | பலகறை | கவடி | |
| | துளம்பு | நிலம்பூச்சி | |
| | எண் | இலக்கம் | |
| | எதி | ஆயுதம் | (5) |
| அலங்கல் 209 | பூமாலை | தெரியல் | |
| | அசைவு | அசைதல் | |
| | தளிர் | பல்லவம் | |
| | இலங்கல் | விளங்கல் | (4) |
| அலம் 74 | நாஞ்சில் | கலப்பை | |
| | அமைவு | அமையுமென்றல் | (2) |
| அலரி 206 | கண்வரி | அரி | |
| | அருக்கன் | சூரியன் | |
| | அழகு | பொற்பு | |
| | ஒருமரம் | அலரிமரம் | |
| | பூ | மலர் | (5) |
| அலர் 226 | பழி | நிந்தை | |
| | விரிபூ | மலர்ந்த பூ | |
| | நீர் | உதகம் | (3) |
| அலவன் 218 | ஞெண்டு | நண்டு | |
| | பூஞை | பூனை | |
| | அம்புலி | சந்திரன் | |
| | கடகராசி | நான்காமிராசி | (4) |
| அல் 213 | இரா | இராத்திரி | |
| | இருள் | இருட்டு | |
| | அல்ல | அல்லவெனல் | (3) |
| அல் 216 | ஆம் | ஆகும் | |
| | அல்ல | வேறு | (2) |
| அல்கல் 53 | நாள் | தினம் | |
| | சுருங்கல் | குறைதல் | |
| | வைகல் | தங்கல் | (3) |

| | | | |
|---|---|---|---|
| அல்லி 218 | வெள்ளாம்பல் | குமுதப்பூ | |
| | காயா | காசாஞ்செடி | |
| | அகவிதழ் | உள்ளிதழ் | (3) |
| அவந்தி 147 | கிளி | தத்தை | |
| | ஓர் ஊர் | அவந்தி நகரம் | (2) |
| அவல் 243 | சிற்றுண்டி | பலகாரம் | |
| | பள்ளம் | குழி | |
| | நீர்நிலை | குளம் | (3) |
| அவி 256 | நெய் | ஆச்சியம் | |
| | சோறு | சாதம் | |
| | அமருண்டி | தேவருணவு | (3) |
| அவிர்தல் 226 | ஒளி | பிரகாசம் | |
| | பீறல் | கிழித்தல் | (2) |
| அவ்வை 246 | தாய் | அன்னை | |
| | ஔவை | தவப்பெண் | (2) |
| அழனம் 140 | தீ | அக்கினி | |
| | பிணம் | பிரேதம் | (2) |
| அழிவு 256 | வீதல் | சாதல் | |
| | கேடு | கெடுதல் | (2) |
| அழுங்கல் 250 | இரங்கல் | அழுதல் | |
| | கேடு | கெடுதல் | (2) |
| அழுவம் 250 | பரப்பு | விசாலம் | |
| | நாடு | தேயம் | (2) |
| அளகம் 268 | மாதர் ஓதி | பெண்மயிர் | |
| | அறல் | நீர் | |
| | மயிர்க்குழற்சி | குழற்கொத்து | (3) |
| அளக்கர் 265 | புடவி | பூமி | |
| | சேறு | கும்பி | |
| | உப்பளம் | கழி | |

| | | | |
|---|---|---|---|
| | கடல் | சமுத்திரம் | |
| | கார்த்திகை | கார்த்திகை | |
| | | நட்சத்திரம் | (5) |
| அளவை 271 | எல்லை | வரப்பு | |
| | நாள் | தினம் | (2) |
| அளறு 274 | நரகம் | நிரயம் | |
| | சேறு | அள்ளல் | (2) |
| அளி 271 | நறவு | கள் | |
| | வண்டு | சுரும்பு | |
| | அன்பு | ஆசை | |
| | கொடை | ஈகை | (4) |
| அளித்தல் 201 | கொடுத்தல் | ஈதல் | |
| | காத்தல் | புரத்தல் | (2) |
| அளை 272 | தயிர் | ததி | |
| | முழை | மலைக்குகை | |
| | புற்று | வன்மீகம் | (3) |
| அள் 269 | உரம் | வலி | |
| | செறிவு | நெருக்கம் | |
| | காது | செவி | |
| | அயில் | கூர்மை | |
| | பற்றிரும்பு | அள்ளு | |
| | (வலியிரும்பு) | | (5) |
| அள்ளல் 272 | நரகம் | கும்பி | |
| | சேறு | குழைசேறு | (2) |
| அறல் 14 | கருமணல் | கறுப்புமணல் | |
| | நீர் | புனல் | (2) |
| அறிக்கை 200 | அறிவு | உணர்வு | |
| | பற்று | ஆசை | (2) |
| அறுகு 290 | சிங்கம் | சீயம் | |
| | ஓர்புல் | அறுகம்புல் | |
| | யாளி | பூட்கை | (3) |

| | | |
|---|---|---|
| அறுவை 208 | சித்திரைநாள் | சித்திரைநட்சத்திரம் |
| | ஆடை | சீலை (2) |
| அறை 284 | முழை | மலையினுட்குகை |
| | மோதல் | அறைதல் |
| | பாறை | பதுக்கை |
| | திரை | அலை |
| | சிற்றில் | சிறுவீடு |
| | மொழி | சொல் (6) |
| அற்றம் 280 | மறைவு | அபவாரணம் |
| | சோர்வு | மறுதி |
| | அவகாசம் | சமயம் (3) |
| அனங்கம் 301 | இருவாட்சி | மயிலை |
| | மல்லிகை | புரூண்டி (2) |
| அனந்தம் 301 | முடிவிலாமை | இறப்பிலாமை |
| | ஆடகம் | பொன் |
| | விண் | ஆகாயம் (3) |
| அனந்தம் 301 | சிவன் | அரன் |
| | மால் | திருமால் |
| | சேடன் | (ஆதிசேடன்) பூமிதாங்கும்பாம்பு |
| | அலாயுதன் | பலபத்திரன் |
| | அருகன் | சமணதேவன் (5) |
| அனந்தை 295 | ஓர் சக்தி | ஈஸ்வரி |
| | பூமி | படி (2) |
| அன் 309 | வினைவிகுதி | வினையினிறுதிநிலை |
| | பெயர்விகுதி | பெயரினிறுதிநிலை |
| | சாரியை | பதப்புணர்ச்சிச் சார்ந்து நிற்கும்சொல் (3) |
| அன்றில் 299 | ஓர்புள் | அன்றில் பட்சி |
| | மூலநாள் | மூலநட்சத்திரம் (2) |
| அன்னம் 307 | ஓதிமம் | எகினம் |
| | சோறு | சாதம் (2) |

| | | | |
|---|---|---|---|
| அன்னை 307 | முன்பிறந்தாள் | அக்காள் | |
| | தோழி | பாங்கி | |
| | தாய் | மாதா | (3) |
| ஆ 241 | இரக்கம் | இரக்கச்சொல் | |
| | பெற்றம் | பசு | |
| | ஆச்சா | ஆச்சாமரம் | |
| | இசை | சொல்லிசை | |
| | வியப்பு | அதிசயம் | (5) |
| ஆகம் 213 | மார்பு | உரம் | |
| | உடல் | தேகம் | (2) |
| ஆகாரம் | உடல் | சரீரம் | |
| | நெய் | கிருதம் | |
| | உண்டி | உணவு | (3) |
| ஆகு 6 | எலி | களிமம் | |
| | பெருச்சாளி | மூடிகம் | (2) |
| ஆகுலம் 31 | வருத்தம் | துன்பம் | |
| | ஓசை | ஒலி | (2) |
| ஆக்கம் 14 | பூமகள் | இலக்குமி | |
| | செல்வம் | பெருக்கம் | (2) |
| ஆங்கு 125 | அசை | அசைச்சொல் | |
| | இடம் | அவ்விடம் | (2) |
| ஆசாரம் 271 | துகில் | சீலை | |
| | தூ | சுத்தம் | |
| | மாரி | மேகம் | (3) |
| ஆசினி 28 | பலாவிசேடம் | ஈரப்பலா | |
| | மரவுரி | நார்ச்சீலை | |
| | மரக்காழ் | மரவயிரம் | |
| | விண் | ஆகாயம் | (4) |
| ஆசு 28 | விரைவு | சீக்கிரம் | |
| | குற்றம் | பிழை | |

| | | | |
|---|---|---|---|
| | அற்பம் | சிறுமை | |
| | மெய்க்கவசம் | ஜீரா | (4) |
| ஆசுகம் 32 | பகழி | அம்பு | |
| | காற்று | வாயு | (2) |
| ஆசை 31 | திசை | திக்கு | |
| | பொன் | கனகம் | |
| | அன்பு | விருப்பம் | (3) |
| ஆடகம் 71 | துவரை | ஆடகி | |
| | பொன் | பிங்கலம் | (2) |
| ஆடல் 61 | பெண்ணாண்கூடல் | கலவி | |
| | வார்த்தை | சொல் | |
| | கூத்தாடல் | நடனம் | |
| | வென்றி | விசயம் | (4) |
| ஆடவர் 61 | புருடர் | ஆண்மக்கள் | |
| | இளையவர் | இளைஞர் | (2) |
| ஆடி 63 | ஓர் மாதம் | ஆடிமாதம் | |
| | கண்ணாடி | உருவங்காட்டி | |
| | உத்தராடம் | உத்தராட | |
| | | நட்சத்திரம் | (3) |
| ஆடு 53 | மேழகம் | செம்மறியாடு | |
| | வெற்றி | ஆசை | (2) |
| ஆணு 168 | இரதம் | இனிமை | |
| | நன்மை | சுகுணம் | (2) |
| ஆணை 78 | மெய் | உண்மை | |
| | வென்றி | வெற்றி | |
| | சூள் | சபதம் | |
| | ஏவல் | ஏவுதல் | (4) |
| ஆதன் 96 | உயிர் | ஆவி | |
| | ஓர்வில்லான் | அறிவில்லான் | (2) |

| | | | |
|---|---|---|---|
| ஆதி 100 | முதல் | தொடக்கம் | |
| | நேரோடல் | நேராகவோடல் | |
| | அருகன் | அருகதேவன் | |
| | மால் | அரி | |
| | ஈசன் | அரன் | |
| | அவதன் | பிரமன் | (6) |
| ஆம்பல் 138 | வேய் | மூங்கில் | |
| | கள் | மது | |
| | கவ்வை | பழிச்சொல் | |
| | அல்லி | குமுதம் | |
| | வங்கியம் | வேய்க்குழல் | |
| | யானை | கரி | (6) |
| ஆம்பி 148 | ஒலி | சத்தம் | |
| | காளான் | ஆம்பி | (2) |
| ஆம்பிரம் 148 | புளிமா | புளிமாமரம் | |
| | தேமா | மாமரம் | |
| | புளிப்பு | அறுவகைச் சுவையிலொன்று | (3) |
| ஆயம் 151 | கவற்றின்தாயம் | சூதாடுகருவி | |
| | ஆதாயம் | இலாபம் | |
| | மாதர்கூட்டம் | பெண்கள்கூட்டம் | (3) |
| ஆய்தல் 162 | நுணுக்கம் | நுட்பம் | |
| | ஆய்தல் | ஆராய்தல் | (2) |
| ஆரம் 169 | பதக்கம் | மதாணி | |
| | முத்தம் | தரளம் | |
| | ஆத்தி | தாதகிமரம் | |
| | சந்தனம் | சந்து | |
| | மாலை | பூமாலை | (5) |
| ஆரல் 185 | கார்திகைநாள் | அறுமீன் | |
| | செவ்வாய் | அங்காரகன் | |
| | அரண் | மதில் | |
| | (அரண் உறுப்பு | மதிலுறுப்பு) | |
| | அழல் | நெருப்பு | |
| | ஒருமீன் | ஆரல்மீன் | (5) |

| | | | |
|---|---|---|---|
| ஆரி 203 | கதவு | வாயில் மறைப்பு | |
| | சோழன் | வளவன் | |
| | அழகு | லாவண்யம் | |
| | மேன்மை | மேம்பாடு | (4) |
| ஆரியர் 203 | மிலேச்சர் | மிலேச்சர் | |
| | நல்லோர் | நல்லவர் | (2) |
| ஆரை 182 | மதில் | எயில் | |
| | புற்பாய் | சாப்பை | (2) |
| ஆர் 178 | கூர்மை | அயில் | |
| | ஆத்தி | ஆத்திமரம் | |
| | தேரின்அுகத்துறு | தேரினகத்திற் | |
| | கதிர் | செறிகதிர் | |
| | (தேரினைந்துருவாணி) | | (3) |
| ஆர்தல் 183 | நிறைதல் | நிரம்புதல் | |
| | உண்டல் | அருந்தல் | (2) |
| ஆர்ப்பு 197 | ஒலி | சத்தம் | |
| | சிரித்தல் | நகைத்தல் | (2) |
| ஆர்வம் 183 | நரகம் | நிரயம் | |
| | அன்பு | ஆசை | (2) |
| ஆர்வலர் 183 | கொண்கர் | கணவர் | |
| | அன்பர் | அன்புடையார் | (2) |
| ஆலம் 207 | வடவிருக்கம் | ஆலமரம் | |
| | நஞ்சு | விடம் | |
| | அலர்பூ | மலர்ந்தபூ | |
| | நீர் | புனல் | (4) |
| ஆலயம் 227 | நகரம் | தேவர்கோட்டயம் | |
| | கோயில் | தேவாலயம் | |
| | ஆனையின் கூட்டம் | யானைகட்டும் கூடம் | (3) |

| | | | |
|---|---|---|---|
| ஆலல் 208 | ஆடுதல் | நடனஞ்செய்தல் | |
| | ஒலி | சத்தம் | (2) |
| ஆல் 216 | ஆம் | ஆகும் | |
| | அல்ல | அல்லவெனல் | |
| | ஆல் | ஆலமரம் | |
| | ஆமெனல் | ஆகுமெனல் | |
| | உருபின்மூன்று | மூன்றாம் வேற்றுமை யினுருபு | (4) |
| ஆவணம் 234 | புனர்தம் | புனர்பூசநட்சத்திரம் | |
| | வீதி | தெரு | |
| | அங்காடி | கடைவீதி | |
| | உரிமை | உரித்து | (4) |
| ஆவரணம் 245 | சட்டை | அங்கி | |
| | தடை | தடுத்தல் | |
| | மறைப்பு | மறைவு | |
| | அரணம் | கோட்டை | |
| | ஆடை | வஸ்திரம் | (5) |
| ஆவி 240 | வாவி | குளம் | |
| | நாற்றம் | வாசனை | |
| | உயிர் | சீவன் | |
| | புகை | தூமம் | |
| | மூச்சு | உயிர்ப்பு | (5) |
| ஆழி 248 | மோதிரம் | விரலணி | |
| | நேமி | சக்கராயுதம் | |
| | கடல் | சமுத்திரம் | |
| | கரை | கடற்கரை | |
| | வட்டம் | விருத்தம் | (5) |
| ஆறு 162 | வழி | நடக்கும்வழி | |
| | நதி | கிழக்கோடுமாறு | (2) |
| ஆற்றல் 279 | பொறை | பொறுத்தல் | |
| | முயற்சி | தாளாண்மை | |
| | அதிகம் | மிகுதி | |

| | | | |
|---|---|---|---|
| | வலி | பலம் | |
| | ஞானம் | அறிவு | (5) |
| ஆனகம் 293 | படகம் | தம்பட்டம் | |
| | துந்துமி | பேரிகை | (2) |
| ஆனி 295 | உத்தராடம் | உத்தராட நக்ஷத்திரம் | |
| | மூலம் | மூலநக்ஷத்திரம் | |
| | சேதம் | நட்டம் (கேடு) | |
| | ஓர்மாதம் | ஆனிமாதம் | (4) |
| ஆனியம் 295 | பொழுது | காலம் | |
| | நாள் | தினம் | (2) |
| ஆன் 203 | இடைச்சொல் | ஓரிடைச்சொல் | |
| | ஆ | பசு | (2) |
| இகல் 3 | பகை | விரோதம் | |
| | வலி | பலம் (வலிமை) | |
| | போர் | சண்டை (யுத்தம்) | (3) |
| இருத்தல் 7 | செகுத்தல் | கொல்லுதல் | |
| | வீழ்த்தல் (வீழ்த்துதல்) | தள்ளுதல் | |
| | இரித்தல் | சாய்த்தல் | |
| | அழைத்தல் | கூப்பிடல் | |
| | ஈதல் | கொடுத்தல் | (5) |
| இகுளை 3 | தோழி | பாங்கி | |
| | நட்பு | நேசம் (சுற்றம்) | (2) |
| இக்கு 17 | கரும்பு | கன்னல் | |
| | கள் | மது | (2) |
| இசை 34 | புகழ் | கீர்த்தி | |
| | கிளவி | சொல் | |
| | பாட்டு | இசைப்பாட்டு | (3) |
| இஞ்சி 40 | புரிசை | மதில் | |
| | இஞ்சி | அல்லம் | (2) |

| | | | |
|---|---|---|---|
| இடக்கர் 54 | மறைத்தவார்த்தை | மறைத்த சொல் | |
| | கும்பம் | குடம் | (2) |
| இடங்கர் 45 | முதலை | கரா | |
| | தூர்த்தர் | விடர் | |
| | குடங்கர் | குடம் | (3) |
| இடம் 202 | செல்வம் | ஐச்சுவரியம் | |
| | விசாலம் | அகலம் | |
| | வாமம் | இடப்பக்கம் | (3) |
| இடி 48 | இடி | அசனி | |
| | நென்மா | நெல்லின்மா | |
| | உறுதிச்சொல் | திடச்சொல் | (3) |
| இடை 52 | நடு | மத்தி | |
| | இடம் | தானம் | |
| | நுசுப்பு | இடை | (3) |
| இதழ் 95 | பனையேடு | பனையோலை | |
| | பூவினிதழ் | மலரினிதழ் | |
| | உதடு | இதழ் | (3) |
| இந்தனம் 124 | மிகை | மேல் | |
| | காட்டம் | விறகு | |
| | எரியிடுகனல் | அக்கினிச்சுவாலை | (3) |
| இபம் 30 | மரக்கோடு | மரத்தின்கொம்பு | |
| | யானை | அத்தி | (2) |
| இயம் 152 | ஒலி | சத்தம் | |
| | வார்த்தை | சொல் | |
| | (மேளம்) வாச்சியம் | வாச்சியப்பொது | (3) |
| இயல் 159 | நடை | ஒழுக்கம் | |
| | தமிழ் | இயற்றமிழ் | |
| | சாயல் | நிறம் | (3) |
| இரணம் 226 | பொன் | சுவணம் | |
| | கடன் | இருணம் | |
| | மாணிக்கம் | ஓர்வகையிரத்தினம் | (3) |

| | | | |
|---|---|---|---|
| இரதம் 165 | புணர்ச்சி | சையோகம் | |
| | சூதம் | இரசம் | |
| | இன்சுவை | இனியசுவை | |
| | அரைஞாண் | அரைநூல் | |
| | தேர் | இரதம் | (5) |
| இரதி 189 | பித்தளை | ஆரகூடம் | |
| | பெண்யானை | பிடி | |
| | மதன்றேவி | இரதிதேவி | |
| | இச்சை | ஆசை | (4) |
| இரத்தம் 200 | செந்நீர் | உதிரம் | |
| | சிவப்பு | சிஞ்சுகம் | (2) |
| இரலை 167 | கலை | ஆண்மான் | |
| | ஊதுங்கொம்பு | கோடு | |
| | முதல்நாள் | அச்சுவினி நக்ஷத்திரம் | (3) |
| இரவி 15 | மலை | வெற்பு | |
| | ஆதித்தன் | சூரியன் | (2) |
| இராகம் 170 | கீதம் | இசைப்பாட்டு | |
| | செம்மை | சிவப்பு | |
| | இச்சை | ஆசை | |
| | நிறம் | காந்தி | (4) |
| இராசி 187 | ஓரை | இராசிப்பொது | |
| | கூட்டம் | தொகுதி | (2) |
| இராசியம் 170 | மறைவு | மறைப்பு | |
| | யோனி | பெண்குறி | (2) |
| இருசு 175 | பண்டியுளிரும்பு | கந்து | |
| | செவ்வை | செம்மை | (2) |
| இருபிறப்பு 191 | எயிறு | பல் | |
| | பார்ப்பு | பிராமணர் | |
| | இந்து | சந்திரன் | |
| | புள் | பறவை | (4) |

| | | | |
|---|---|---|---|
| இருள் 191 | ஒருநரகம் | ஓர்விதநரகம் | |
| | மையல் | மயக்கம் | |
| | இருள் | இருட்டு | |
| | கருமை | கறுப்பு | (4) |
| இலஞ்சி 209 | மா | மாமரம் | |
| | வாவி | குளம் | |
| | கொப்பூழ் | உந்தி | |
| | எயில் | மதில் | |
| | குணம் | பண்பு | |
| | மகிழ் | மகிழமரம் | |
| | ஏரி | ஏரி | (6) |
| இலம்பகம் 209 | அத்தியாயம் | இலக்கியத்தின் கூறுபாடு | |
| | நுதற்சூட்டு | நுதலணிமாலை | (2) |
| இலயம் 218 | கூத்து | நடம் | |
| | கூத்தின்விகற்பம் | தேசிகம் | (2) |
| இலாங்கலி 200 | அலம் | கலப்பை | |
| | தென் | தென்னமரம் | |
| | காந்தள் | செங்காந்தண்மலர் | (3) |
| இல் 214 | இல்லாள் | மனைவி | |
| | இல்லையென்றால் | இல்லென்றல் | |
| | இராசி | ஓரை | |
| | சாவு | மரணம் | |
| | இடம் | நிலம் | |
| | வீடு | கிரகம் | (6) |
| இவர்தல் 231 | எழுச்சி | அகைத்தல் | |
| | ஆசை | இன்பம் | |
| | ஏறுதல் | ஊக்கல் | |
| | சேறல் | செல்லல் | |
| | மேவல் | பொருந்தல் | (5) |
| இவறல் 231 | மறவி | மறதி | |
| | ஆசை | அன்பு | |
| | பேரிச்சை (பேராசை) | பேரவா | (3) |

| | | | |
|---|---|---|---|
| இழுமெனல் 249 | ஓசை | அனுகரணவோசை | |
| | இனிமை | இனிப்பு | (2) |
| இழை 100 | நூல் | பஞ்சுநூல் | |
| | ஆபரணம் | ஆணி | (2) |
| இளமை 274 | தண்மை | தாழ்மை | |
| | காமம் | காமவிச்சை | |
| | (உன்மத்தம் | மயக்கம்) | |
| | இளமையின்பருவம் | இளமைப்பருவம் | (3) |
| இளி 259 | இசை | நெற்றியிற்பிறக்குமிசை | |
| | இசித்தல் | சிரித்தல் | |
| | எல் | இகழ்ச்சிக்குறிப்பு | |
| | இணங்குதல் | இணக்கம் | |
| | (யாழ்நரம்பு | யாழினோர்நரம்பு) | |
| | உரித்தல் | பெயர்த்தல் | (5) |
| இளை 262 | புயல் | மேகம் | |
| | இளமை | மழவு | |
| | வேலி | மதில் | |
| | தலைக்காவல் | முதற்காவல் | (4) |
| இளைத்தல் 265 | (மெலிவு | தேய்வு) | |
| | இளைப்பு | உண்டவாயாசம் | |
| | இரங்கல் | (மெலிவு) | |
| | | சோர்தல் | (2) |
| இறப்பு 170 | (சா | மரணம்) | |
| | மிகுதி | மிகல் | |
| | போக்கு | போதல் | (3) |
| இறால் 134 | தேன்கூடு | கோற்றேன் | |
| | எருது | இடபம் | |
| | மீன் | இறான்மச்சம் | (3) |
| இறுத்தல் 282 | ஒடித்தல் | முறித்தல் | |
| | தங்கல் | வதிதல் | |
| | இயம்புதல் | சொல்லல் | (3) |

| | | | |
|---|---|---|---|
| இறும்பு 286 | தாமரைப்பூ | இராசீவம் | |
| | மலை | சிறுமலை | |
| | குறுங்காடு | சிறுவனம் | (3) |
| இறும்பூது 286 | தகைமை | பெருமை | |
| | வெற்பு | மலை | |
| | அதிசயம் | வியப்பு | |
| | குழை | தளிர் | |
| | தூறு | சிறுதூறு | (5) |
| இறை 285 | சிவன் | ஈசன் | |
| | கடன் | இருணம் | |
| | வேந்தன் | அரசன் | |
| | கையிறை | கையுனிறை | |
| | இறுப்பிறை | குடியிறை | |
| | சிறந்தோன் | உயர்ந்தோன் | |
| | சிறுமை | அற்பம் | |
| | புள்ளிறகு | பறவையினிறகு | |
| | தங்கல் | இறுத்தல் | |
| | சென்னி | தலை | |
| | கூனி | வளைவு | |
| | (சேடு | பெருமை) | |
| | இறப்பு | வீட்டிறப்பு | (12) |
| இறைவை 275 | புட்டில் | இறைகூடை | |
| | ஏணி | சேணி | (2) |
| இனம் 299 | கிளை | சுற்றம் | |
| | அமைச்சு | மந்திரி | (2) |
| ஈகை 15 | பொன் | கனகம் | |
| | கொடை | கொடுத்தல் | |
| | இண்டை | இண்டங்கொடி | (3) |
| ஈடு 51 | குழைவு | நெகிழ்தல் | |
| | ஒப்பு | உவமை | |
| | வலி | பலம் | |
| | பெருமை | மாட்சிமை | (4) |

| | | | |
|---|---|---|---|
| ஈண்டு 91 | இவ்விடம் | இந்தவிடம் | |
| | இப்படி | இவ்வண்ணம் | |
| | சடுதி | சீக்கிரம் | |
| | | (விரைவு) | (3) |
| ஈமம் 96 | மயானம் | சுடுகாடு | |
| | காட்டம் | விறகு | (2) |
| ஈரம் 17 | குளிர்ச்சி | சீதனம் | |
| | அன்பு | தயை | (2) |
| ஈழம் 253 | பொன் | கநகம் | |
| | கள் | மது | |
| | ஓர்தேசம் | சிங்களதேசம் | (3) |
| உக்கம் 103 | தீ | நெருப்பு | |
| | இடை | மருங்கு | |
| | ஆன் | பசு | |
| | ஏறு | எருது | (4) |
| உச்சி 35 | நண்பகல் | நடுப்பகல் | |
| | உச்சி | நடுத்தலை | |
| | (உச்சந்தலை) | | (2) |
| உஞற்று 266 | இழுக்கு | தவறு | |
| | (ஊக்கம் | உள்ளக்கிளர்ச்சி) | |
| | தாளாண்மை | முயற்சி | (2) |
| உடல் 58 | பொருள் | பொன் | |
| | ஆகம் | தேகம் | (2) |
| உடு 50 | விண்மீன் | தாரகை | |
| | கிடங்கு | அகழி | |
| | நாவாயோட்டுங்கோல் | ஓடக்கோல் | |
| | | (மரக்கலம் | |
| | | ஓட்டுங்கோல்) | |
| | அம்பினீர்க்கு | அம்பினிறகு | (4) |
| உடுக்கை 65 | தண்ணுமை | இடைசுருங்குபறை | |
| | துகில் | சீலை | (2) |

| | | | |
|---|---|---|---|
| உடை 65 | துகில் | ஆடை | |
| | செல்வம் | ஐச்சுவரியம் | (2) |
| உணர்வு 73 | தெளிவு | தேற்றம் | |
| | உடையொரீதல் | பிணக்குநீங்கல் | |
| | அறிவு | புத்தி | (3) |
| உண்டி 288 | புசித்தல் | உண்டல் | |
| | சோறு | சாதம் | (2) |
| உண்டை 82 | திரளை | திரட்சி | |
| | படைவகுப்பு | சேனைவகுப்பு | (2) |
| உத்தரம் 105 | ஊழித்தீ | வடவாமுகாக்கினி | |
| | மேல் | உயர்ச்சி | |
| | மறுமொழி | எதிர்மொழி | |
| | வடக்கு | வடதிசை | (4) |
| உத்தி 108 | திருவுறுப்பு | நுதன்மேவணி (சீதேவி என்னும் தலைக்கோலம்) | |
| | சுணங்கு | தேமல் | |
| | உரையாடல் | சொல்லல் | (3) |
| உத்திரம் 119 | இல்லுறுப்பு | உத்திரம் | |
| | ஓர்நாள் | உத்திரநக்ஷத்திரம் | (2) |
| உந்தி 125 | தேருருள் | தேர்ச்சக்கரம் | |
| | ஆறு | நதி | |
| | உவரி | கடல் | |
| | நீர்ச்சுழி | சுரியல் | |
| | கொப்பூழ் | நாபி | (5) |
| உப்பு 132 | மெல்லியலாராடல் | மகளிர் விளையாட்டு | |
| | உவர் | உவர்த்தல் | |
| | கடல் | சமுத்திரம் | |
| | இனிமை | தித்திப்பு | (4) |
| உம்பர் 137 | தேவர் | வானோர் | |
| | உயர்நிலம் | தேவலோகம் | |
| | மேல் | ஆகாயம் | (3) |

| | | | |
|---|---|---|---|
| உம்பல் 145 | ஆண்விலங்கு | ஆண்டிமருகம் | |
| | வேழம் | யானை | |
| | குலம் | சாதி | (3) |
| உயவை 159 | காக்கணம் | காக்கணஞ்செடி | |
| | முல்லை | முல்லைச்செடி | |
| | கான்யாறு | காட்டாறு | (3) |
| உயிர் 57 | காற்று | வாயு | |
| | சீவன் | ஆன்மா | |
| உரம் 166 | வலி | வலம் | |
| | ஞானம் | அறிவு | |
| | ஊக்கம் | உள்ளக்கிளர்ச்சி | |
| | மார்பு | அகலம் | (4) |
| உரு 195 | நிறம் | வண்ணம் | |
| | வடிவு | உருவம் | |
| | அட்டை | சளுகம் | (3) |
| உருத்தல் 101 | தோற்றல் | முனத்தல் | |
| | கோபம் | சினம் | (2) |
| உரை 195 | விளவி | சொல் | |
| | தேய்வு | தேய்தல் | (2) |
| உலகம் 218 | திசை | திக்கு | |
| | விண் | ஆகாயம் | |
| | பூமி | அகிலம் | |
| | குணம் | பண்பு | |
| | சனம் | கூட்டம் | |
| | உயர்ந்தோர் | மேலோர் | (6) |
| உலக்கை 281 | உரோங்கல் | முசலம் | |
| | ஓணம் | திருவோணநட்சத்திரம் | (2) |
| உலவை 226 | கால் | காற்று | |
| | மரத்தின்கொம்பு | மரக்கோடு | |
| | தழை | இலை | |
| | விலங்கின்கோடு | மிருகத்தின்கொம்பு | (4) |

| | | | |
|---|---|---|---|
| உவணம் 229 | கலுழன் | கருடன் | |
| | உயர்ச்சி | உயரம் | |
| | கழுகு | சகுந்தம் | (3) |
| உவம்பு 236 | மகிழ்ச்சி | களிப்பு | |
| | மேடு | உயரம் | (2) |
| உவளகம் 235 | மதில் | எயில் | |
| | ஓர்பக்கம் | ஓரிடம் | |
| | ஊருணி | குளன் | |
| | பள்ளம் | குழி | |
| | உள்ளில் | அந்தப்புறம் | (5) |
| உவா 195 | தந்தி | யதனை | |
| | இளையோன் | மம்பி | |
| | பௌவம் | பூரணை | (3) |
| உழைப்பு 263 | வலி | வலிமை | |
| | உற்சாகம் | ஊக்கம் | (2) |
| உழை 252 | இடம் | கண் | |
| | மான் | நவ்வி | |
| | யாழிலோர்நரம்பு | வீணையினான் | |
| | | காந்தந்தி | (3) |
| உளை 262 | பரியதுகட்டுமயிர் | குதிரைக் கழுத்திற் கட்டுமயிர் | |
| | பிறமயிர் | (குதிரைக்கணிமயிர்) | |
| | | குசை | (2) |
| உள்ளம் 266 | முயற்சி | ஊக்கம் | |
| | நெஞ்சு | மனது | (2) |
| உள்ளல் 263 | நினைவு | நினைப்பு (நினைத்தல்) | |
| | உள்ளான் | ஓர்குருவி (உள்ளான் குருவி) | (2) |
| உறவி 281 | எறும்பு | பிபீலிகை | |
| | ஊற்று | நீரூற்று | |

| | | |
|---|---|---|
| | உலைக்களம் | கொல்லனுலை முதலிய இடம் |
| | உறவு | சுற்றம் |
| | உயிர் | ஆவி (5) |
| உறழ்வு 281 | புணர்வு | புணர்ச்சி |
| | காலம் | வேளை |
| | செறிவு | நெருக்கம் |
| | இடையீடு | இடையிடுதல், தடை |
| | ஒப்பு | உவமை (5) |
| உறுகண் 281 | துன்பம் | இடுக்கண் |
| | பயம் | அச்சம் |
| | மிடி | தரித்திரம் |
| | நோய் | வியாதி (4) |
| உறுதி 285 | நன்மை | நலம் |
| | கல்வி | வித்தை (2) |
| உறுப்பு 85 | அவயவம் | அங்கம் |
| | உடம்பு | மேகம்( சரீரம் ) (2) |
| உறுவன் 281 | முனி | படிவன்(முனிவன்) |
| | புத்தன் | அருகன் (2) |
| உறை 284 | பொருள் | பாக்கியம் |
| | மருந்து | ஔஷதம் |
| | வாழ்நாள் | ஆயுள் |
| | உணவு | புசிப்பு |
| | வெண்கலம் | கஞ்சம் |
| | காரம் | உறைப்பு |
| | படைக்கலத்தின் கூடு | ஆயுதவுறை |
| | எண்குறித்திறுதி பெய்தல் | எண்ணிறுதிக் கணிடுமோர் நிலக்குறிப்பு |
| | பாற்பிரை | பாலிடுபிரை |
| | இடைச்சொல் | உறையென்னு மிடைச்சொல் |
| | நகரம் | உறையூர் |
| | நீர்த்துளி | ஜலத்துளி (12) |

| | | | |
|---|---|---|---|
| உறையுள் 285 | நாடு | தேயம் | |
| | ஊர் | நகரம் | (2) |
| உற்கை 288 | தாரகை | விண்மீன் | |
| | தீக்கொள்ளி | கடைக்கொள்ளி | (2) |
| ஊக்கம் 9 | வலி | வலிமை | |
| | உற்சாகம் | மனமகிழ்ச்சி | |
| | உள்ளத்தின்மிகுதி | உரன் | |
| | | (உள்ளக்கிளர்ச்சி) | (3) |
| ஊசி 251 | சூசி | இழைவாங்கி | |
| | ஆணி | எழுத்தாணி | (2) |
| ஊதியம் 74 | இலாபம் | ஆதாயம் | |
| | கல்வி | வித்தை | (2) |
| ஊர்தல் | சிதறல் | சிந்தல் | |
| | தடவல் | வருடல் | (2) |
| ஊர்தி 183 | தேர் | இரதம் | |
| | விமானம் | தேவரூர்தி | |
| | பாண்டில் | பண்டி | |
| | உம்பல் | யானை | |
| | சிவிகை | தண்டிகை | |
| | பாய்மா | குதிரை | (6) |
| ஊழ் 251 | முறை | முறைமை | |
| | வெயில் | சூரியன் | |
| | பகை | விரோதம் | (3) |
| ஊழ்த்தல் 106 | நினைத்தல் | உன்னல் | |
| | செவ்வி | பதம் | |
| | பதனழிவு | கன்றுதல் | (3) |
| ஊறு 277 | தீமை | பொல்லாங்கு | |
| | தீண்டல் | தொடுதல் | |
| | கொலை | கொல்லல் | |
| | இடையூறு | துன்பம் | (4) |

| | | | |
|---|---|---|---|
| ஊற்று 287 | ஊன்றுகோல் | ஊற்றுக்கோல் | |
| | உறவி | நீரூற்று | (2) |
| எகினம் 5 | புளிமா | புளிப்புள்ள மாமரம் | |
| | ஞாளி | நாய் | |
| | கவரிமா | கவரிமான் | |
| | நீர்நாய் | எகின் | |
| | அன்னம் | அஞ்சம் | |
| | | (அன்னப்புள்) | (5) |
| எக்கர் 19 | சொரிதல் | கொட்டுதல் | |
| | (மறைத்தல் | மறைத்த சொல்) | |
| | குவிதல் | திரளுதல் | (2) |
| எஃகு 127 | உருக்கு | எஃகு | |
| | வேல் | வேலாயுதம் | |
| | கூர்மை | நுண்மை | (3) |
| எச்சம் 30 | குறை | குறைவு | |
| | சேய் | சந்ததி | |
| | யாகம் | வேள்வி | (3) |
| எண் 90 | எள் | திலம் | |
| | இலக்கம் | எண் | |
| | எளிமை | தளர்வு | |
| | சோதிடம் | சோதிடநூல் | |
| | விசாரம் | ஆலோசனை | (5) |
| எருந்து 202 | ஊரல் | ஊலூரகம் | |
| | கிளிஞ்சல் | ஏரல் | (2) |
| எருவை 192 | கொறுக்கை | கொறுக்கைச்சி | |
| | கோரை | பஞ்சாய் | |
| | கழுகு | சகுந்தம் | |
| | செம்பு | தாம்பிரம் | |
| | இரத்தம் | உதிரம் | (5) |
| எலி 226 | பூரநாள் | ஓர் நட்சத்திரம் | |
| | எலி | சிகரி | (2) |

